ஸ்டார் ஹோமியோபதி இன்ஸ்டிட்யூட்

(ரிஜிஸ்டர்ட்)

16, வித்வான் பொன்னுச்சாமி பிள்ளை தெரு,
வடக்காவணிமூல வீதி, மதுரை.


# மெட்டீரியா மெடிக்கா

## 5-ம் மாதப் பாடம்





**STAR HOMOEOPATHIC INSTITUTE**

(Registered)

**MADURAI**

15-வது அத்தியாயம்

# மெட்டீரியா மெடிக்கா
# (Materia Medica)

## 1. அக்கோனைட்டம் நாபில்லஸ் Acoitum Napellus.

நம் தமிழ்நாட்டில் கருநாபி என்று வழங்கிவரும் மருந்துச் செடியின் ஒருவகைக் கிழங்கிலிருந்து எடுக்கப் படும் சத்தின் சாராம்சமே அக்கோனைட் என்பதாகும்.

முக்கிய குறிகள் :-

அக்கோனைட்டை உபயோகிக்க வேண்டுமானால், எந்த வியாதியிலும், அதிகமான பிராணபயம் அதிலும் தம் சாவைப்பற்றிய மனோபயம், அமைதியின்மை, கவலை அடிக்கடி படுக்கையில் புரளுதல், திடீர் திடீரென்று தோன்றும் சுரம், சுரத்தின் கடுமையால் அனத்தல், பிதற்றுதல், உடம்பில் எரிச்சல், தாங்கமுடியாத அளவு கடுமையான குத்துவலி, சில சமயம் சில்லிட்டு உடனே மறுசமயம் வறண்டு சூடாக இருக்கும் சர்மம், முதலிய முக்கிய குறிகள் இருக்கவேண்டும்.

**உபயோகம் :—**

(1) நல்ல திடகாத்திர முடையவர்களுக்கு எவ்வித முன் அறிவிப்பின்றி திடீரென தோன்றும் சகல நோய் களுக்கும் முதன்முதலில் கொடுத்தால், "சூரியனைக்கண்ட பனிபோல்" பிணிகள் தீரும்.

(2) குளிர் காற்றிலும், பனி நேரங்களிலும் அதிகமாக நடமாடித் திரிவதால் ஏற்படும், **சுரங்கள், வாயுசுரம், நிமோனியா** என்ற கபசுரத்திற்கும், **தொண்டைக்கட்டு, நெஞ்சுத்தடிமன், ஜலதோஷம், புளூரசி** என்ற சுவாச

கோச உறைவேக்காடு முதலிய நோய்களுக்கு ஆரம்பத்தில் கொடுக்கவேண்டும்.

(3) எதிலும் பயப்படக்கூடிய, பயந்த சுபாவமுடையவர்களுக்கு, அதிலும் பெண்கள், கர்ப்பஸ்திரீகள் பயந்த காரணத்தால் கர்ப்பம் சிதைந்துவிடும் என்ற நிலைமை தோன்றின உடனே **அக்கோனைட்** கொடுத்தால் நல்ல பலன் கிட்டும், இருட்டில் பயத்தால் பேய், பிசாசு என்று திகில் அடைந்தவர்களுக்கு ஏற்படும், சுரம், ஹிருதயவலி, அதனால் வயிற்றோட்டம் ஆகிய கோளாறுகளுக்கு மிகச் சிறந்த சஞ்சீவியே.?

(4) கடும் வெய்யிலில் காததூரம் நடந்து கொண்டிருக்கையில், திடீரென்று மழைபெய்து அதில் நனைவதினால் சிலருக்கு சுரம், சீதபேதி என்ற வயிற்றுக் கடுப்பு ஏற்படுவதற்கும், பனிக்காலங்களில் இம்மாதிரி நோய்கள் ஏற்படுவதற்கும் மிக முக்கியமான மருந்தாகும்.

(5) **பல்வலி, தலைவலி, காதுவலி, வயிற்றுவலி** உபாதைகள், கடுமையாகவும், தாங்கமுடியாமலும் இருப்பதால், நோயாளி அமைதி அற்று, மிக்க மனவேதனையுடன் தாம் இறந்துவிடுவோம் என்ற பயத்துடனிருப்பார். பெரும்பாலும் இவ்வலிகள் மாலை நேரங்களிலும், இரவிலும் தான் அதிகமாகி வியாதியஸ்தர்களை வாட்டி வதைக்கின்றன. சிலசமயம் நள்ளிரவிலும் இந்த உபாதைகள் அதிகரிக்கலாம். அப்பொழுது படுக்கையில் தான் போர்த்தியிருந்த போர்வையை திடீரென தூக்கி எறிந்துவிடுவார். அம்மாதிரி வலி உண்டானபோது வியாதியஸ்தருக்கு படுத்தால் முகம் சிவக்கும். படுக்கையிலிருந்து எழுந்து உட்கார்ந்தால் முகம் சட்டென்று வெளுத்துவிடும். சிலருக்கு எழுந்து உட்கார்ந்தால் தலைச்சுற்றல் ஏற்படுகின்றது. இம்மாதிரி கோளாறுகளுக்கு 30·C வீரியத்தில் கொடுக்கவும்.



(6) அதிர்ச்சி அல்லது பயந்த கோளாறுகளினால் திடீரென சிறுநீர், அவயவங்களில் வேக்காடு ஏற்பட்டு, மூத்திரத்துடன் இரத்தம் கசியலாம்; மூத்திரத்தில் கலக்கும் இரத்தம் நல்ல சுத்த சிவப்பு நிறமாயிருக்கும். சிலருக்கு மூத்திரம் குறைந்தும், அல்லது உற்பத்தியாகாமலும் இருக்கும்; அவ்வமயம் அக்கோனைட்டின் பிரதான குறிகள் இருப்பின் நன்கு குணப்படுத்தும்.

பிறக்கும் சிசுக்களுக்கு அதிர்ச்சியின் காரணமாக சிறுநீர் பிரியாமல் இருந்தால், உடனே **அக்கோனைட் 3,** போடன்சியில் இரண்டு சிறிய மாத்திரைகளை வாயிலே வைக்கவும்; உடனே சிறுநீர் வெளியாகும்.

**இதர உபயோகங்கள் :—**

வெளிமூச்சுவிடும்போது ஏற்படும் சிறு இருமலுக்கும்; கண்களில் சிவந்த இரணங்களுக்கு ஆர்னிக்காவுடனும்; மாற்றி மாற்றிக் கொடுக்கலாம். ஆஸ்துமா போன்ற இழுக்கும் இரைப்புநோய் தற்காலிகமாகத் தணிவதற்கும் (1x or 3xல்) கொடுக்கலாம்.

**எச்சரிக்கை :—**

(a) மேலே சொன்ன முக்கிய குறிகள் இல்லாவிட்டால் இம்மருந்தை பிரயோகிக்கக் கூடாது.

(b) சுரம், காய்ச்சல்களில் வியர்வை வியர்த்து சுரம் நிற்காவிடில் கண்டிப்பாய் இம்மருந்தை மீண்டும் கொடுக்கக் கூடாது.

**கவனிப்பு :—**

(c) சுரம் வந்து 2, 3 தினங்கள் ஆனபிறகும், கடுமையாயில்லாத காய்ச்சல்களுக்கும், டைபாயிடு போன்ற நீடித்த சுரங்களுக்கும் அக்கோனைட் உதவாது.

(d) காய்ச்சல், வலி, போன்ற நோய்களுக்கு ஆரம்பத்தில் 1, 2, 3, 4 டோஸ்கள் வரை இம்மருந்து கொடுத்தும் குணம் காணாவிடில், வேறு மருந்தை ஆராய்ந்து கொடுக்கவும்.

## 2. அடோனிஸ் வெர்னலிஸ் Adonis Vernalis.

இருதயத்தைப் பலப்படுத்த உதவும் ஔஷதங்களில் இது மிகச் சிறந்தது. ஏனெனில் சில சமயங்களில் இருதயத்தைப் பற்றிய நோய்களுக்குத் தக்கக்குறிகளை உடைய மருந்துகள் பிரயோகித்தும் எவ்வித பலனும் ஏற்படாத நிலையில் அடோனிஸ் வெர்னலிஸ் கொடுத்து குணம் காணப்பட்டிருக்கின்றது,

**முக்கிய உபயோகம்:—**

(1) இருதயம் சரிவர வேலை செய்யாத காரணத்தினால் உடலில் பல பாகங்களில் ஏற்படும் நீர் சுரப்பு வியாதிக்கும் இருதயத்தசைகளில் நீர் தங்கி அதனால் மூச்சுத்தினறி இருதயம் சற்று விக்கமடைவதற்கும் இந்த மருந்தை கொடுத்தால் ஷை கோளாறுகள் நீங்குவதுடன், இருதயமும் பலப்பட்டு சரிவர வேலைகளைச் செய்து கழிவு நீர்களை பிரித்து உடனுக்குடன் வெளியேற்றிவிடும்'

**நீர் சுரப்பின் குறிகள்;—**

முதன் முதலில் பாதங்கள் வீங்கி, கால், கைகள் வீங்கும், பின்னர் அடிவயிறும் வீக்கம் கண்டு பெருத்துவிடும், மூச்சிவிட சிரமம் ஏற்பட்டு திணறுவார்கள்.

## 3. அப்ரோடேனம் Abrotanum.

**விளக்கம்:—**

பாலர்களின் பல வியாதிகளுக்கு உபயோகப்படும் சிறந்த மருந்து. பச்சோந்தியைப்போல் எந்த வியாதியும், இடம்விட்டு இடம் மாறுவதும்; கூடுவிட்டுக் கூடுபாயும் தன்மையைப்போல் அவ்வியாதியின் ரூப, உருவம் அடிக்கடி மாறும்.

**உதாரணம் :-**

எலும்பு மூட்டுகளில் உண்டான வாதநோய் போய், இருதயத்தைப் பீடித்தலும், அதன் பின்னர் முதுகெலும்பாகிய முள்ளந்தண்டை பாதித்தலும்; கழுத்து கன்னம் இவைகளில் உண்டான தாளம்மை மறைந்து, ஆண்களுக்கு விரைகளையும், பெண்களுக்கு ஸ்தனங்களையும் தாக்குதல் இம்மாதிரி சமயங்களில் பல்சடில்லா கொடுப்பது தான் வழக்கம்; ஆயினும் இதனால் குணம் காணாவிடில் அப்ரோடேனம் குணமளிக்கும்.

**மனக்குறிகள் :—**

முறட்டுப் புத்தி, முன்கோபக்குணம் சிறிதுகூட இரக்கம் இல்லாதிருக்கும் கொடிய சுபாவம் இத்தியாதி குணங்கள் சிறுவர்களிடமே அதிகமாக இருக்கும்.

(1) குழந்தைகளின் உடல்மெலிவிற்கும்; கால்கள் இளைத்து சூம்பி வயிறு பெருத்தலுக்கும்;

(2) சிறு குழந்தைகளுக்கும், பிறந்த சிசுக்களுக்கும் தொப்பூல் குழியிலிருந்து இரத்தமும், ஒருவகை ஊனீரும் கசிந்து வருவதற்கும்;

(3) வேற்றுமுறை வைத்தியங்களால், வயிற்றோட்டம் தடைப்பட்டு, அதனால் மூட்டுகளில் ஏற்படும்

வாதநோய்களுக்கும், மற்றும் மூக்கிலிருந்து ரத்தம் சொட்டுவதற்கும்;

(4) மலச்சிக்கலும், வயிற்றோட்டமும் மாறிமாறித் தோன்றுதல்; மலச்சிக்கலின்போது வாதநோய் அதிகப்பட்டு அதன்பின் வாதநோய் மறைந்து மூலநோய் ஏற்படுதல்.

(5) அகோரப்பசி, நிறையச் சாப்பிட்டு வந்தாலும் சரீரம் இளைத்துவிடுதல்.

(6) முழங்கால், கணுக்கால் இவைகள் விரைத்தும் வீக்கத்துடன் குத்துவலியும்; சிலசமயம் மணிக்கட்டு, குதிகால் இவைகளில் கடுமையான வலியும், எலும்பு மூட்டுகளில் வலியும், மாறி, மாறித் தோன்றுதல். ஆகிய மேலே குறிப்பிட்ட வியாதிகளுக்கு அப்ரோடேனம் சிறந்த மருந்து.

## 4. அபிஸ்மெல்லிபிகா Apis Mellifica.

தேனிக்களில் இராணி ஈ என்று சொல்லும்படியான உயர்ந்த ஈக்களின் விஷச்சத்தை வீரியப்படுத்தி, விலைமதிக்க முடியாத ஒளஷதமாக நாம் உபயோகிக்கின்றோம்.

**முக்கிய விசேஷ குறிகள் :—**

தேள் அல்லது குழவி கொட்டினதுபோல எரிச்சலும், கடுக்கும் நொந்தவலி; இத்துடன் திரேகத்தில் சிவந்த வீக்கம்; அபிஸ் வியாதியஸ்தருக்கு தாகமே ஏற்படாது அதிலும் நீர்சுரப்பு வியாதிகளில் கண்டிப்பாய் தாகவரட்சி இருக்காது.

**உபயோகங்கள்:—**

(1) பரபரத்த நிலை, ஸ்திரத்தன்மை இல்லாது தொழில்களை அடிக்கடி மாற்றிக்கொண்டிருக்கும் சுபாவம்



பொறுமைக்குணம், இத்தகைய குணம் உள்ளவர்களுக்கு ஏற்படும் சகல வியாதிகளிலும், கொட்டும் வலி இருந்தால் அபிஸ் நன்கு குணம் அளிக்கும். அத்துடன் எந்த வியாதியிலும் தலையணைக்குள் தன் தலையைப் புகுத்திக் கொள்வர்

(2) **விதவைகள், கணவனை இழந்த பெண்கள்** இவர்களின் ஜனன உறுப்புகளில் (சினைப்பை) கொட்டும் வலியுடன் கூடிய புணர்ச்சி இன்பத்தில் ஆசை அதிகரித்தல் இதை அகற்றி அத்தகைய எண்ணங்களை மாற்றிவிடும்.

(3) மூத்திரம் தடைபட்ட எந்த வியாதியிலும் அபிஸ் கொடுத்த பிறகு மூத்திரம் ஏராளமாக வெளியேறும்.

(4) விரல் சுற்றி, நகச்சுற்று, அக்கி போன்ற சிவந்த ரணம் சிவப்பு நிறமுள்ள சொறிகள், கொப்புளங்கள் இராஜபிளவை இம்மாதிரி உபாதைகளில், சிவந்த வீக்கத்துடன், கொட்டும் வலி காணலாம். இவ்வியாதிகளுக்கு அபிஸ் தான் சரியான மருந்தாகும்.

(5) குழந்தைகள், தாய்ப்பால் குடிக்கும் குழந்தைகள் இவர்களுக்கு மூத்திரம் தடைப்படுவதற்கு அபிஸ் கொடுத்து நீரைப் பிரிக்கலாம், சில குழந்தைகளுக்கு நீர் அதிகமாகப் போனாலும் அபிஸ் கொடுத்து சரிப்படுத்தலாம் (இக் குழந்தைகள் இரவிலோ, பகலிலோ தொட்டியில் தூங்கும் போதும், விழித்திருக்கும்போதும் திடீரென்று 'வீல்' என்ற சப்தத்துடன் கதறி அழும்.) இக்குறி முக்கியம்.

(6) நீர் சுரப்பு வியாதிகள்:— கீழ்கண்ட வியாதிகளில் முன் அறிவிப்பாக கண்களின் கீழ் இமைகள் இரண்டும் வீங்கி, அவைகள் பைகளைப்போல் காட்சி அளிக்கும், கன்னம், உதடுகள், காதுகள், ஸ்தனங்கள், பீஜங்கள், ஆண் தண்டு சுரப்பிகள் இவைகளில் வீக்கம் கண்டு கொட்டும்

வலி உண்டாகும். பொதுவாக உடல் முழுவதும் வீக்கம் ஏற்பட்டு அதிலும் மகோதரம், பாண்டு வீக்கம் போன்ற வியாதிகளில் பாதங்கள், கை, கால்கள், வயிறு பின்னர் முகம் முதலிய பாகங்கள் வீங்கிவிடும். முற்றின வீக்க வியாதிகளில் உடலின் மேல்பாகம் வீக்கமானது மெழுகைப் போல வெண்மையாக மினுமினுக்கும், வீக்கங்கள் கடினமாயுமிருக்கும். இந்த வியாதிகளில் கொட்டும் வலி இருந்தாலும், இல்லாவிட்டாலும், **தாகம்** மட்டும் கண்டிப்பாய் இராது.

(7) **சுரம்:**— விட்டு விட்டுவரும் முறை சுரத்தில் தினமும் பிற்பகல் 3 மணியிலிருந்து சரியாக 1 மணிக்குள் குளிரும், காய்ச்சலும்வரும் அப்பொழுது மட்டும் தாகம் இருக்கும். மற்ற எல்லா நீர் சுரப்பு, வீக்கமுள்ள வியாதிகளுக்கு **தாகம்** கண்டிப்பாய் இருக்காது.

(8) **ஆஸ்துமா, புளுரசி** போன்ற வியாதிகளில் வியாதியஸ்தர் தான்விடும் ஒவ்வொருமூச்சும் அதுவே தன் கடைசி மூச்சு என்று நினைக்கும்படியான திணரலும், கஷ்ட சுவாசமும் ஏற்படும். அதிலும் மூச்சை உள்ளே வாங்கும்போது அம்மாதிரி உணர்ச்சி ஏற்படும். இவைகளுக்கு 30 வீரியத்தில் அபிஸ் கொடுக்க குணம் ஏற்படும்.

**எச்சரிக்கை:**—

அபிஸ் மெல்லிபிகாவிற்கு முன்னேயும், பின்னேயும் 'ரஸ்டாக்ஸ்' கொடுக்கக்கூடாது. அபிஸ் மெதுவாகவே வேலை செய்கின்ற மருந்து ஆகையால் அதை அடிக்கடி மாற்றக்கூடாது.

**கவனிப்பு:**—

ஒடி வியாதிக் குறிகள் எல்லாம், வலது பக்கமே தாக்கி பிறகு இடது பக்கம் செல்லும். வலது பக்கம் தான் வியாதி



கள் ஆரம்பிக்கும், வியாதியஸ்தர்கள் குளிர்ந்த பானம், ஆகாரங்களையே விரும்புவார்கள்.

உஷ்ணமான அறைகளில் இருந்தாலும், உஷ்ணம் உடலில் படுவதாலும் நோய்க் குறிகள் அதிகரிக்கும். உதாரணமாக ஒடி வியாதிகளில் பாதிக்கப்பட்ட பெண்கள் சமயல் அறைப்பக்கமே எட்டிப் பார்க்கமாட்டார்கள்.

உசிதம்போல் 6 முதல் 200 வீரியம் வரை உபயோகிக்கலாம்.

## 5. அபோசினம் கன்னபினம் Apocynun Cannabinum.

இது ஒரு வகைச் செடி, இந்தியாவிலேயே கிடைக்கக் கூடிய ஒரு சிறந்த மூலிகை. இதன் சமூலமும் அதாவது வேர், தண்டு, இலை, கொடி வகை அத்தனையும் போட்டு கஷாயமாக இறக்கி கீழ்க்கண்ட நோய்களுக்கு உபயோகிக்கலாம். பொதுவாக சாராயம் கலந்து தாய்த்திரவமாகவும் சில சமயம் வீரியப்படுத்தியும் கொடுப்பதுண்டு. தாய்திராவகத்திலும் நோய்களுக்குக் கொடுக்க நல்ல பலனைக் கொடுக்கும்.

**முக்கிய குறிகள்:**—

நீர் சுரப்பு, வீக்கம் போன்ற வியாதிகளில், வியாதியஸ்தருக்கு நிறைய **தாகம்** இருக்கும், தண்ணீர் குடித்தால் வயிற்றில் ஒத்துக்கொள்ளாது அப்படியே வாந்தி எடுப்பான், அல்லது வலியும் வேதனையும் ஏற்படும். வீக்கங்கள் வலி இல்லாமலும் மிருதுவாயும் ('அபிசைப்போல் கடினமாய் இராமல்') வெண் நிறமாயும், வெளுத்து மினுமினுப்புடனும் இருக்கும். (இக்குறிகள் 'அபிஸ்மெல்லிபிகா' என்ற மருந்தின் குறிகளுக்கு நேர் எதிரிடையாய் இருக்கின்றது.)

**வியாதி விளக்கம்:—**

நீர்சுரப்பு என்ற வீக்க வியாதி ஒரு தனிப்பட்ட வியாதி அல்ல. இவ்வியாதி பலவித காரணங்களால் ஏற்படுகின்றது. குறிப்பாக (1) கல்லீரல் சரிவர வேலைசெய்யாத காரணங்களினாலும், (2) மூத்திரக்காய்கள் சம்பந்தப்பட்ட கோளாறுகளினாலும், (3) இருதயம், இது சம்பந்தப்பட்ட தசைகள் சரிவர இயங்காத காரணத்தினாலும், (4) ஊநீர் ஜவ்வுகளில் திடரென்று ஏற்படும் வேக்காட்டினாலும் சரீரத்தின் கழிவு நீர்கள் வியர்வையாயும், மூத்திரமாயும் உடனுக்குடன் வெளியேற்றப்படாமல் உடலின் உள்ளேயே தங்கிவிடுவதால் ஷை வீக்கங்கள் ஏற்படுகின்றன.

**உபயோகங்கள்:—** (1) இருதயம் பலஹீனப்பட்டு அதன்பொருட்டு இருதயம் சரிவர வேலைசெய்யாத காரணத்தினால் ஏற்பட்ட வீக்கம், நீர்சுரப்பு வியாதிகளுக்கு அபோசினம் நன்கு வேலைசெய்யும். அத்துடன் மேலே குறிப்பிட்ட குறிகள் இருக்கவேண்டும்.

(2) மேலே குறிப்பிட்ட முக்கியக் குறிகளுடன் இருதயக் கோளாறினால் சில வாலிபப் பெண்களுக்கு மாதவிடாய் மாதாமாதம் ஏற்படாமல் தடைப்படுகின்றது. அவ்விதப் பெண்களின் அசட்டையால் வயிறும், பாதங்களும் பிறகு வீக்கமடைகின்றது. இம்மாதிரி இருவகை நோய்களையும் ஏக காலத்தில் 'அபோசினம்' குணப்படுத்துகின்றது.

**கவனிப்பு:—** இருதய சம்பந்தமல்லாது வேறு உறுப்புக்களின் கோளாறுகளால் உண்டாக்கப்படும் நீர்சுரப்பு, வீக்க வியாதிகளுக்கு 'அபோசினம்' பிரயோஜனப்படாது. 6 வீரியத்திலிருந்து 30, 200 வரை கொடுக்கலாம்.

## 6. அம்மோனியம் கார்பானிகம் Ammonium Carbonicum

இது ஒருவகை ரஸாயன உப்பு. முகர்ந்தால் காரமுள்ள வேகம் அடிக்கும். இது கொடுக்கப்படும் நோயாளிக்கு அதைப்போலவே உடலிருந்து வெளியேற்றப்படும் கழிவுப் பொருள்கள் காரத்தன்மை உடையதாய் இருக்கின்றது.

**உபயோகம்:—** (1) மார்ச்சளி, கபம் இவற்றினால் அவஸ்தைப்படும் கிழவர்களுக்கு குறிப்பாக, மழைக் காலங்களில் விடியற்காலை 3 மணிமுதல் 5 மணிவரை இருமலினால் மிகக் கஷ்டப்பட்டால் இம்மருந்து கொடுக்கவும்.

(2) ஜலதோஷம், மூக்கில் நீர் ஒழுகுதல் காரத்தன்மையாய் இருப்பதால் மூக்கும் புண்ணாகிவிடுவதுடன், அந் நீர்பட்ட மேலுதடும் புண்ணாகிவிடுகின்றது. இக்கோளாறையும் நீக்கவல்லது.

(3) ஜலதோஷத்தினால் இரவில் படுக்கையில் மூக்கில் சுவாசிக்க முடியாது வாயினால் சுவாசிப்பதற்கு மிகச்சிறந்த மருந்து. இம்மாதிரி மூக்கு அடைத்து திணரல் உண்டாவதால் குழந்தைகள் தூங்கவே முடியாது. இதற்கு 30 வீரியத்தில் கொடுக்கவும்.

(4) முகம் கழுவும்போது குறிப்பாக நெருப்பு, அடுப்பு, புகையில் வேலை செய்பவர்களுக்கும் பெண்களுக்கும் காலையில் இரத்தம் மூக்கிலிருந்து வடிந்தால் இதை இம் மருந்து நிறுத்திவிடும். ஆரம்பத்தில் 30 வீரியத்திலும், நாள்பட்டதற்கு 200 வீரியத்திலும் கொடுக்கவும்.

## 7. அர்ஜண்டம் நைட்ரிகம் Argentum Nitricum.

இது வெள்ளி என்ற உலோகப் பொருள். இதை வீரியப்படுத்தி மருந்தாக நம் ஹோமியோபதி முறையிலும்

நம் தமிழ் நாட்டின் சித்தர்கள் முறையிலும் பஸ்பம் சுண்ணங்களாக உபயோகித்திருக்கின்றார்கள். இம்மருந்து கலந்த திரவத்தை சில துளிகள் எடுத்து தோலின்மேல் தடவினால் அது ஒரு மாதிரி அந்த இடத்தில் கருப்பு நிறம் ஏற்படுகின்றது. ஆகையால் இம்மருந்தை கொடுக்கப்படுபவர்கள் கருத்தும் இளைத்தும், தன் வயதில் இளமையாய் இருந்தாலும் கிழவர்போல் தோன்றும் சரீரவாகை உடையவர்களாய் இருக்கவேண்டும்.

**முக்கிய மனக்குறிகள்:—** தெருவில் நடக்கும்போது இருபுறமுமிருக்கும் உயர்ந்த கட்டிடங்களைப் பார்த்தவுடன் ஒருவிதமான பயந்த பரபரப்பு உண்டாகி கிறுகிறுப்பு ஏற்படும். இனிப்புப் பண்டங்களில் அதிக ஆவல்; ஆனால் சாப்பிட்டவுடனே வயிற்றுப் போக்கு ஏற்பட்டுவிடும்.

**உபயோகம்:—** (1) அவ்வப்போது தோன்றும், பல கிமோர் வியாதிகளுக்கும் குறிப்பாக வயிற்றுப் போக்கிலும்: மனம், மூளை சம்பந்தப்பட்ட உழைப்பினால் ஏற்படும் நீடித்த வியாதிகளுக்கும் மிகச் சிறந்த மருந்து.

(2) தலைவலியில், தன்தலை பெரியதாக ஆகிவிட்டது போன்ற உணர்ச்சி, இத்தகைய உணர்ச்சியால் நோயாளி தலை மிகப் பாரமாக இருக்கிறதென்று அடிக்கடி சொல்லுவார். அவ்வலி துணிகொண்டு இறுக்கக் கட்டினால் சிறிது சமனமடையும்.

(3) கண்வலி, அதிகமான மஞ்சள்நிற பீழை தள்ளுதல், இமைகளில் ரணம் தடித்துக் காணுதல், குழந்தைகளுக்கு காலையில் கண் திறக்கமுடியாது ஒட்டிக் கொள்ளுதல், கண்சிவப்பு உள்ளுக்கு இம்மருந்தை உள்ளேயும் 2, 3 டோஸ்கள் கொடுத்து பின்னர் வெளியே 200 போட்டனரி உள்ள திரவத்தைத் 4-சொட்டுகள் எடுத்து தண்ணீரில் கரைத்து கண்ணில் போட்டால் உடனே சொஸ்தமாகும்.



(4) சரீர பலஹீனமும் ஏற்பட்டு சதா எழுதும் குமாஸ்தாக்களுக்கு கை நடுக்கம் ஏற்பட்டால் இம்மருந்தை 30 வீரியத்தில் காலை மாலை 4 நாட்கள் கொடுக்க குணம் ஏற்படும். இளம் வயதுடையவர்களுக்கு எழுதும்போது ஏற்படும் கை நடுக்கத்துக்கு மிகச் சிறந்தது.

(5) தலைச் சுற்றல் கிறுகிறுப்பு இத்துடன் காதுகளில் இரைச்சல் இருப்பவர்களுக்கு ஏக காலத்தில் கைகளும் கால்களும் நடுங்கும். இவர்களுக்கு 200 போட்டன்சியில் வாரம் இருமுறைக் கொடுக்கவும்.

(6) டான்சில் என்ற தொண்டையில் சதை வளரும் நோயின் ஆரம்பத்தில் உண்டாகும் பயங்கரமான வலிகளுக்கும் தொண்டையில் உண்டான புண்களுக்கும் இதைக் கொடுக்க உடனே வலி குறையும்.

(7) ரத்த சீதபேதி வியாதியில் ஆசனத்தில் குச்சி கொண்டு குத்துவது போன்ற பயங்கர வலி தோன்றினால் இம்மருந்து கண்டிப்பாய்க் கொடுக்கவும். இவ்வலியானது மலம் கழிவதற்கு முன்னும் பின்னும் ஏற்படும்.

(8) வயிற்றில் ஆகாரம் சாப்பிட்ட ஒவ்வொரு தடவையும் வயிறு உப்பிக் கொண்டு வயிறு விரிந்து வெடித்து விடுவதுபோன்ற உணர்ச்சி ஏற்படும்; அம் மாதிரி அதிகமான காற்று (வாய்வு) உற்பத்தியாகி சிலருக்கு ஆசனத்தின் வழியே மிக வேகமாக பெரும் சப்தத்துடன் வாய்வு பிரியும். வேறு சிலருக்கு வயிறு வெடிப்பதுபோல் பலமான ஓசையுடன் வெற்று ஏப்பம் மிக வேகமாய்ப் பிரியும்.

(9) வயிற்றுப் போக்கு வியாதி:— வெளியூருக்குப் பயணம் கட்டும் சமயங்களிலும், அவசர வேலைகளைச் செய்ய ஆயத்தமாகும் போதும் வீட்டைவிட்டு எங்கே

யாவதுகோவில் குளங்களுக்குப் போகும் போதும், பள்ளி மாணவர்கள் பரீட்சைக்குப் படிக்கும்போது பரீட்சை நெருங்கியவுடன் ஏற்படும் வயிற்றுப் போக்குக்கும், சிறந்த மருந்து. இத்துடன் வயிற்றுப் போக்கின்போது மலமானது படபடத்த சத்தத்துடனும் பச்சை நிறமாயும் (கீரையைப்போல்) இருக்கும். குழந்தைகளுக்கும் பெரியவர்களுக்கும் வயிற்றுப் போக்கில் மலமானது முதலில் வெளியேறும் போது பல நிறங்களில் இருந்தாலும் சற்று நேரத்துக்கெல்லாம் அரைத்த கீரையைப் போல் பச்சை நிறமாக மாறிவிடும்; இக்குறி ஒன்றே "அர்ஜன்டம் நைட்ரிகம்" கொடுப்பதற்கு வேண்டிய முக்கிய ஆதாரமாகும்.

(10) ஜனன உறுப்புகளின் வியாதி :— ஆண்களின் மேகவெட்டை வியாதிக்கும் ஸ்திரீகளின் லிக்கோரியா (Leucorrhoea) என்ற வியாதியில் வெள்ளை ஒழுக்கு மஞ்சள் நிறமாய் இருப்பதற்கும் இம்மருந்தைக் கொடுக்கலாம்.

(11) ஆண்தன்மை இழந்த ஆண்களுக்கும், முக்கியமாக புணர்ச்சி செய்யும் காலங்களில் போகத்திற்குத் தயாராகும் சமயத்தில் ஆண்குறி பலமிழந்து விடுதல் இதற்கும் இம்மருந்து கொடுக்கலாம். ஆண் பெண் இருபாலர்களும் புணர்ச்சி செய்த பின்னர் ஏற்படும் வலிகளுக்கும், மர்ம ஸ்தானங்களிலிருந்து ரத்தம் கசிவதற்கும் மிக்க உபயோகமுண்டு. இரவிலும் பகலிலும் நோயாளிகளுக்குத் தெரியாமலேயே மூத்திரம் வெளியாகி விடுதல் அவர்களுக்கு உண்டாகும் நரம்பின் தளர்ச்சியையும் மூளையைப் பலப்படுத்தவும் "அர்ஜண்டம் நைட்ரிகம்" கண்டிப்பாய் கொடுக்கலாம்.

**இதர உபயோகங்கள்** :— பாடகர்கள், மேடைப் பிரசங்கிகள் தொண்டை கறகறப்பிற்கும்; அசுத்த ரத்தக்குழாய்கள் சுருண்டு வீங்கிப் புடைத்தலுக்கும் (Vericose Veins)



படுக்கை விரிப்பு துணிகளில், வாந்தியெடுத்த நீர்பட்ட இடங்களில் கறுப்புக் கறையை ஏற்படுத்தும் வாந்திக்கும் உபயோகிக்கலாம். ஞாபகசக்தியை விருத்திபண்ணுவதில் இந்த ஔஷதம் சிறந்து விளங்குகின்றது. பாரிச வாய்வு வியாதிக்கும், ஒரு பக்கமாக நரம்பை இழுத்துப் பிடித்து வலிக்கும் வியாதிக்கும் ஏற்றது.

## 8. அல்லியம் சீபா Allium Cepa.

இது நம் நாட்டு வெங்காயத்திலிருந்து விரியப்படுத்தி உபயோகிக்கும் மருந்தாகும். வெங்காயத்திற்கு எம்மாதிரி வேகமும், ஒருவித காரமும் இருக்கின்றதோ அதேபோல அவ்வியாதியஸ்தர்களுக்கும் வேக்காடு ஏற்படுகின்றது.

**முக்கிய குறிகள்**:— ஜலதோஷம் ஆரம்பிக்கும் போதே இவ்வியாதியஸ்தர்களுக்கு அடிக்கடி தும்மலும், மூக்கிலிருந்து தண்ணீர் மாதிரி ஒருவகையான காரமுள்ள நீர் தாரை தாரையாகக் கொட்டும், சிலருக்கு ஏக காலத்தில் கண்களிலிருந்தும், மூக்கிலிருந்தும் அம்மாதிரி நீர் ஒழுகும்; ஆனால் கண்களிலிருந்து வரும் நீரானது சிலுசிலுப்பாகவும், காரத்தன்மை இல்லாமலும் இருக்கும். மூக்கிலிருந்து வரும் நீரானது காரமுள்ளதாய் இருப்பதால், மூக்கும், மேலுதட்டின் நடுபாகமும் வெந்து சொர சொரப்புடன் இருக்கும்.

**உபயோகம்** :— (1) சின்னம்மை, ஜலதோஷம், இன்புளுயன்சா போன்ற சுரம், ஆகிய வியாதிகளில் மேற்குறிப்பிட்ட குறிகள் இருப்பின் இம்மருந்து கண்டிப்பாய் கொடுக்கப்பட வேண்டும். பேய்முஷ்டை என்ற அரிப்பு தடிப்பு வியாதிக்கும் கொடுக்கலாம்.

(2) சதா மூக்கிலிருந்து காரமான நீர் லேசாக வடிந்து கொண்டும், அதிகமாக ஆகாரம், அல்லது பழங்கள்,

வெள்ளரிக்காய் போன்ற காய்கறிகள் வேக வைக்காமல் சாப்பிடும் குழந்தைகளுக்கு ஏற்படும் வயிற்று வலிக்கும் மிகச்சிறந்த மருந்து. ஷை குழந்தைகளுக்கு ஷை நீர் வடியும் பாகத்தில் தோலானது வெண்மையாயும், லேசான எரிச்சல் கொடுத்துக் கொண்டு சொர சொரப்பாயிருக்கும்.

**கவனிப்பு:**— ஜலதோஷத்திற்கு இம்மருந்தை உபயோகித்த பிறகு, ஜலதோஷமானது நெஞ்சுவரையிலும் பரவி இருமல் ஏற்படின், உடனே இந்த மருந்தை நிறுத்திவிடவும்; "நக்ஸ்வாமிகா 30, பாஸ்பரஸ் 30" இவ்விரு ஔஷதங்களையும் மாற்றி மாற்றிக் கொடுக்கவும்.

உஷ்ணத்தினுல், உஷ்ணமான இடத்தில் இருந்தாலும் வியாதிக் குறிகள் அதிகப்படும்; திறந்த, குளிர்ந்த இடத்தில் இருந்தால் வியாதிகள் குறையும்.

## 9. அலுமினு Alumina.

இது ஒருவிதமான களிமண். ரஸாயன முறையில் மருந்தாக உபயோகப்படுகிறது.

**முக்கிய குறிகள்:**—சாம்பலை வழக்கமாக பல் துலக்கும் போது தின்றுவரும் கெர்ப்பஸ்திரீகள், மண், சாம்பல், சாக்பீஸ் வகைகளைப் பொறுக்கித் தின்று அதனுல் வயிறு பெருத்திருக்கும் குழந்தைகள்; உருளைக்கிழங்கைப் பிரியமாகத் தின்று அதனுல் உபத்திரவமடையும் ஆண், பெண்கள் பிடிவாதமான மலச்சிக்கல் இத்தியாதி குணம் படைத்தவர்களுக்கு ஏற்படும் கீழ்கண்ட நோய்களுக்குச் சிறந்த மருந்து.

**உபயோகம்:**— (1) மலச்சிக்கல் வியாதிக்கு "பிரையோனியா" கொடுத்தும் குணம் ஏற்படாத கேஸ்களுக்கு 'அலுமினு' வைக் கொடுக்கவேண்டும். பிறந்த குழந்தைகளுக்கும், செயற்கை உணவாகிய பால்பவுடர், டப்பா பால் இவைகளை உண்டு வளரும் குழந்தைகளுக்கும் ஏற்படும் மலச்சிக்கல் வியாதியில் மலமானது, களிமண் மாதிரியும், வெளுத்தும் பிசுக்கென்றும் மிகச்சிரமத்துடன் வெளியாவதால் இம்மருந்து உபயோகப்படும்.



(2) பெண்களுக்கு ஏற்படும் **சூதகத்தடை** என்ற வியாதியில், **மாதவிடாய் தாமதித்தும்**, வெளிப்படும் தீட்டு மிகக் குறைந்தும், நிறம் மாறியும், நோயாளியின் உடல் வெளுத்து ரத்தசோகை என்றழைக்கப்படும் நோய் தோன்றி, ஷை குறிப்பிட்ட குணங்குறிகளுடன் "சாம்பல், மண் தின்னும் பழக்கம்" இருப்பின், இம்மருந்தே நன்கு குணம் செய்யும்.

(3) பெண்களுக்கு உண்டாகும், **வெட்டை, வெள்ளை ஒழுக்கு** வியாதியில், அவர்கள் நின்று கொண்டிருக்கும் பொழுது, வெள்ளையானது, இரண்டு தொடைகளின் வழியே, **கால் பாதம் வரைக்கும்** 'மழமழ' வென்று வழியும். இக்குறியுள்ள வெள்ளை ஒழுக்கிற்கு **'அலுமினு'** மிக மிகத் தேவையே.

## 10. அலெட்ரிஸ் பாரிநோஸா Aletris Farinosa.

அமெரிக்காவிலும் ஐரோப்பா கண்டத்திலும் பயிராக்கப்படும் ஓர்வித புல்லின் (Stargrass) வேர், கிழங்குகளிலிருந்து தயாரிக்கப்படும் தாய்த்திராவக மருந்து. இது ஸ்திரீகளின் கெர்ப்பாசயக் கோளாறுகளுக்கு ஒரு 'டானிக்' போன்று உபயோகப்படக்கூடிய அற்புத மருந்து.

**உபயோகம்:**— (1) தாமதித்த மாதவிடாய், 40, 50, நாட்கள் சென்றபின் கொஞ்சமாக போக்கு ஏற்படுவதற்

கும்; திரேகத்திடமற்று, சக்தி குன்றிய சமயங்களில், மாத விடாய் மிகவும் கொஞ்சமாக வெளிப்பட்டு அத்துடன் வயிற்றிவலி, இடுப்பிலும் வலி ஏற்படுதல், சிலருக்கு அவ் வலிகள் தாங்கமுடியாது தவிப்பர்; இம்மாதிரி வியாதி களுக்கு கொடுக்கக் குணமேற்படும்.

இளம் பெண்களுக்கு கெர்ப்பப்பை வளர்ச்சி அடையா மலும், சோகை வியாதியினுல் பூப்படையாத தன்மையுடன், முகமானது வாடி, வதங்கி இருப்பவர்களுக்கு, நிகரற்ற நிவாரணி. இத்தகையோர்களுக்கு நீடித்துக் கொடுத்து வந்தால் நிச்சயம் குணமாகும்.

## 11. அபிசிந்தியம் Absinthium.

முக்கியமாக காக்கை வலிப்பிற்கு உபயோகமாகும் மருந்து.

**முக்கியக் குறிகள்:—** வலிப்புவரும் முன் உடல் நடுக்கம் உண்டாகும். வலிப்பு முதலில் முகத்தில் ஆரம் பித்து சரீரத்திலும், கை, கால்களிலும் பின்னர் பரவும் பெரிய முக்கல் முனங்களுடன் சத்தம் போட்டுக்கொண்டு கீழே விழுந்துவிடுவர். மலம், முத்திரம் தன்னை அறியாமலே போகும். பல்கிட்டி, வாயில் நுரைதள்ளி, நாக்கையும் கடித்துக்கொண்டு, பின்பக்கமாக முதுகுவளையும்; மேலும், காலும், கைகளும் அங்குமிங்கும் உதறி, உதறித் துடிக்கும்.

**வேறு உபயோகம்:—** சுரம், டைபாயிட் போன்ற வியாதிகளில் உண்டாகும் ஜன்னி, இழுவை, அமைதி யின்மை, பேத்தல், புலம்பல் முதலியவைகளுக்கும் கொடுக்கலாம்.

## 12. அமில் நைட்ரேட் Amyl Nitrate.

காக்கை வலிப்பு என்ற உபாதையில், வலிப்பின் வேகத்தைக் குறைக்க, வியாதியஸ்தரின் மூக்கிலே முகரச் செய்தால், வலிப்பு குறைந்து, மயக்கமும் நீங்கும். சாதா ரண மயக்கம், பிரக்ஞை இழத்தல் இவைகளுக்கும் முகரச் செய்யவும்.

**முக்கியக் குறிகள்:—** கண் சிவப்புடன், விழிகள் விரிந்து திருதிருவென்று பார்வையும், நெஞ்சில் படபடப்பும், கைகள் நடுக்கமும், மூச்சுமுட்டித் திணரலுடனும் ஏற் படும் வியாதிகளுக்கு 30 வீரியத்தில் கொடுக்கவும். **பிளட்பிரசர்** என்ற வியாதிக்கும் கொடுக்கலாம்.

## 13. அனகார்டியம் ஓரியெண்டேல் Anacardium Orientale.

இது நமது நாட்டில் சித்தர்கள் காலம் முதல் மருந்து வகைகளுக்கு ஓர் உபபொருளாகவும், பாசாணச் சரக்கு களை கட்டுவதற்கும் உபயோகிக்கப்பட்ட சேங் கொட்டை என்ற விஷச்சத்துள்ள கொட்டை.

**விசேஷ மனக்குறிகள்:—** இரண்டு விதக் குணம் இருப் பதாக ஒரு தோற்றம், அதாவது ஒரு குணத்தில் காரியத்தை செய்யும்படி உத்திரவிட்டது. மற்றொரு குணத்தில் செய் யாமல் தடுப்பது போன்ற பிரேமை (பொய்த் தோற்றம்) யாரிடத்திலும் சந்தேகம். யாரோ ஒருவர் தன்னை பின் தொடர்வதுபோல் தோற்றம். **ஞாபக சக்தி குறைதல், பிறரைத் திட்டவும், சாபம் இடவும் செய்தல்,** உடலில் பல பாகங்களில் தக்கை அழுத்திக்கொண்டு

இருப்பது போன்ற உணர்ச்சி, அடிக்கடி பிரார்த்தனை செய்தல், ஆணையிடும் சுபாவம். இத்தியாதி மனக் குறிகள் கீழ்கண்ட வியாதிகளில் இருந்தால் நன்கு குணம் செய்யும்.

**உபயோகம்:—** (1) மஞ்சள் கொப்புளங்களுடன் புறப்படும் சிறுசிரங்கு அக்கிக் கொப்புளம்போன்ற சர்ம வியாதிகளில் 'ரஸ்டாக்ஸ்' என்ற மருந்தைப்போல் வேலை செய்யும்.

(2) குஷ்டம், படர்தாமரை, கரப்பான் படைகள் (முகம், கழுத்து பாகங்களில்) கருப்பு நிறமாயும், விஷத் தன்மை உடையதாயும் இருப்பவைகளுக்கு உபயோகிக் கவும். சோரினம் கொடுத்தும் குணமேற்படாத கேஸ் களுக்கு இதை உபயோகிக்கலாம்.

(3) தலைவலி, வயிற்றுவலி போன்ற நோவுகள், சாப்பிட்டவுடன் மறைந்துவிடும். பின் இரண்டு மணி நேரம் கழித்தவுடன் மீண்டும் வலிக்க ஆரம்பித்துவிடும் (Compare காலிபாஸ், சோரினம்) இம்மாதிரி "சாப்பிட்டால் மறையும்" எந்த உபத்திரவத்திலும் குறிப்பாக (பெண்கள் கர்ப்பமா யிருக்கும் காலங்களில்) ஏற்படும் குமட்டல், வாந்தி இவை களுக்கும் கொடுக்கலாம். **ஆனால் மேகக்கிரந்தி வியாதி களுக்கு உதவாது.**

**கவனிப்பு:—** சர்ம வியாதியான படர்தாமரை, கரப் பான் படை, எக்ஸிமா இவைகளுக்கு 'ஸோரினம்' கொடுத்தும் குணம் காணவிட்டால் 'அனகார்டியம்' கண் டிப்பாய் கொடுக்கவும். பூச்சித் தொத்தரவு உடையவர் களுக்கு ஏற்படும் ஷை தோல் வியாதிகளுக்கு இடை இடையே சீன 200 கொடுத்துவரவும்.

## 14. ஆசிட் நைட்ரிக். Acid Nitric.

இது நாம் அக்னித் திராவகம் என்று அழைக்கும் ஒரு வகை ரஸாயனத் திராவகப் பொருள். இதைத் திறந்தால் ஆவிபறக்கும் தன்மையுள்ள அவ்வளவு அக்கினி சக்தி உடையது. தோலில் பட்டால் புண்ணாகிவிடும்.

**விசேஷக் குறிகள்:—** அடிக்கடி வயிற்றுப்போக்கு, அளவு கடந்த வாடை வீசும் மூத்திரம் (குதிரை மூத்திரம் போன்று) எவ்வியாதியிலும், வியாதியஸ்தருக்கு மலம் கழிந்த அந்த நேரம் முதல் அபானத்தில் வலியும், கடுப்பு எரிச்சலும் அதிக நேரம் நீடித்திருக்கும். (வலியானது ஊசி குத்தினாற்போல் கடுக்கும். ஷை குறிகளுடன் இருக்கும் கீழ்கண்ட நோய்களுக்கு இம்மருந்து தான் குணம் அளிக் கும்.

**உபயோகம்:—** (1) ரத்த சீதபேதி, மலம் கழிந்த வுடன் ஊசியினால் குத்துவதுபோல வலி அல்லது ஆசனம், மலப்பை கிழிந்து விட்டது போன்ற கடுக்கும் வலி, அதிக நேரம் 'மணிக்கணக்கில் நீடித்திருக்கும்.'

(2) வியர்வை, உமிழ் நீர், வாய் இவைகளில் மிகக் கெட்ட துர் நாற்றமும், அழுகிய பிணம்போல் வாடை, வீச்சம், இக்குறிகளையுடைய சகல வியாதிகளுக்கும் இம் மருந்தே மிகச் சிறந்தது.

(3) **அடிக்கடி வயிற்றுப்போக்கு ஏற்பட்டு,** அவ்வியாதியஸ்தர், **மேகநீர் சம்பந்தமான**, கிரந்தி, வெள்ளை, வெட்டை வியாதிகளுடன் கஷ்டப்படுவாராகில், இதைக் கொடுத்து, வயிற்றுப் போக்கை நிறுத்துவதுடன், மேகக் கிரந்தி விஷங்களையும் உடலினின்றும் அகற்றி விடும்.

தளர்ந்த உடலும், மிகுந்த பலவீனமும் உடையவர்களுக்கு, அற்ப **காரணங்களினால்** அடிக்கடி வயிற்றுப் போக்கு ஏற்படுவதற்கும் இதைக் கொடுக்கலாம்.

(4) **வெடிப்பு, புண்கள்**:— அபானத்தில் வெடிப்பும், நீர்கசிதலும், நாக்கில் வெடிப்பு, வாய் வேக்காடு இவைகளுக்கும், வாயின் ஓரம், மூக்கின் விளிம்புகளில், மலப்பை, ஆசன வாய்புறங்களில், உதடுகளின் சந்திப்பு, யோனி ஆகிய பாகங்களில் ஏற்படும் இரணங்களுக்கும், இதர குழியுள்ள புண்களுக்கும் நிகரற்ற நிவாரணி. இம்மாதிரி ரணங்களும், வெடிப்புகளும், அளவு கடந்த உஷ்ணத்தினாலும் சிபிலிஸ் என்ற மேகக் கிரந்தி விஷத்தினாலும் ஏற்படுவது உண்டு. அல்லது சிலருக்கு நாட்டு வைத்தியர்களால் **பாசாண மருந்துகளாகிய பூரம், வீரம், லிங்கம்,** முதலிய பாதரசமுள்ள பச்சவெட்டு மருந்துகளை சுத்தி செய்யாமலும், பக்குவப்படுத்தாமலும் கொடுத்து கெடுத்தக் காரணத்தாலும் ரணங்கள், வாய் வேக்காடு, வெடிப்பு ஏற்படுவது உண்டு. அதற்கும் இது உபயோகப்படும்.

5. **உடல் மிகவும் சோர்ந்து,** டைபாயிட் போன்ற சுரங்களில் குடலிலிருந்து ஏற்படும் இரத்தப் பெருக்கில், இரத்தமானது நல்ல சுத்த சிவப்பு நிறமாயும், மிக நாற்றத்துடனும் இருந்தால் கண்டிப்பாய் கொடுக்கவும். இம்மாதிரி சுரங்களில் கைவிடப்பட்ட கடைசிக் கட்டத்திலும், ஆசிட் நைட்ரிக் அற்புதமாய் வேலை செய்து உயிரைக் காப்பாற்றியிருக்கின்றது.

**இதர உபயோகம்**:— மர்ம ஸ்தானங்களில் மேக வெட்டை, கிரந்தி சம்பந்தமான துர்சதை வளர்ச்சி அடைந்து அச்சதையைத் தொட்டவுடன் **இரத்தம் கசிந்தால்** அதற்கும் கொடுக்கலாம்.

## 15. ஆசிட் பாஸ்பாரிகம் Acid Phosphoricum.

இது ஒரு ரஸாயனப் பொருளிலிருந்து தயாரிக்கப்படும் மருந்து.

**விசேஷக் குறிகள்** :— நீண்ட நோயினால் சரீரம் இளைத்தல்; மனோபலம் முதலில் குன்றி பின்னர் சரீர பலம் குறைதல்; வெண்மையான, பாலைப்போல் மூத்திரம் கழிதல்; அல்லது சுண்ணாம்பைக் கரைத்த நீர்போன்று மூத்திரம் வெளியேறுதல். எந்த உபாதையிலும் வயிற்றுப்போக்கு ஏற்பட்டு அதனால் பிறகு நோயாளிக்கு மற்ற வியாதிகள் குறைதல். வயிற்றுப்போக்கு ஏராளமான மலத்துடன் போகும், **ஆனால் பலவீனம் இருக்காது.**

**உபயோகம்**:— (1) சதைப் பிடிப்பு இல்லாமல் உயரமாய் வளரும் பெண்களுக்கும், படிக்கும் மாணவிகளுக்கும் ஏற்படும் தலைவலிக்கு சிறந்த மருந்து. மாத விடாய்க்குப் பின் ஏற்படும் வெள்ளை ஒழுக்கிற்கும் (Leucorrhoea) அத்துடன் அதுபட்ட இடத்தில் நமைச்சலும், பலவீனமும் ஏற்படுதல்,

(2) **சிசுக்கள், பாலர்கள், பெரியவர்கள்** இவர்களுக்கு, வயிற்றுப்போக்கு வியாதி பல நாட்கள் நீடித்தும், ஏராளமான மலம்போகும், போக்கின் அளவிற்குத் தகுந்த பலவீனம் இருப்பதில்லை. அவ்விதம் இல்லாமல் இருப்பது தான் முக்கிய குறி. வயிற்றுப் போக்கில் வலி ஏற்படுவதில்லை. ஜீரணமாகாத பொருட்களும் கலந்து, தண்ணீர் போன்ற போக்கு, வலி இல்லாமல் இருந்தால் இதைக் கொடுக்கலாம்.

(3) அளவு மீறிய ஸ்திரீ போகத்தினால் ஏற்பட்ட நரம்புத் தளர்ச்சிக்கும், **தகாத முறைகளில் இந்திரியத்தை இழந்து தவிக்கக்கூடியவர்களின்** மன பலவீனத்திற்கும் ஏற்ற மருந்து.

(4) தூக்கத்தில் சிறுநீர் ஏராளமாய் கழிதல், அடிக்கடி நீர் பிரிவதால் ஏற்படும் **நீரழிவு** வியாதிக்கு (Diabetes Insipidus) ஏற்ற மருந்து. குழந்தைகளின் நீர் அடிக்கடியும் ஏராளமாகவும், **பால்போன்ற வெண்மை** அல்லது சுண்ணும்பைக் கரைத்த நீர்போல, (Phosphates of urine) வெளியாகும். இதற்கு 'ஆஸிட் பாஸ்' கொடுக்கலாம்.

(5) டைபாயிட் போன்ற நீடித்த சுரத்தின் போது சரீரத் தெம்பு குறைந்து பிரக்ஞையற்ற நிலையில் படுக்கையில் சிறிதும் அசையாமல் ஒரு கல் சிலையைப்போல் படுத்திருப்பார், ஆயினும் எழுப்பினால் நல்ல சுய நினைவுடன் பதில் கூறுவர்.

(6) அளவு மீறிய போகத்தாலும், அவ்வகையில் ஏற்பட்ட அதிக துக்கத்தாலும் உடல் வரவர இளைத்து இருமலில்கொண்டுவிடும். பின்னர் டியூபர்குளோசிஸ் என்ற கொடிய நோய் ஏற்பட்டுவிடும். கோழையானது நாற்றத்துடன், உப்புக்கரிக்கும் தன்மையாக இருந்தால் இம்மருந்தே பயன்படும்.

**இதர உபயோகம்:—** தன் குடும்பத்திலோ அல்லது நெருங்கிய உரவினர்களின் மரணம், பொருள் நஷ்டம் இத்தியாதி க்ாரணங்களால் ஏற்படும் மனக்கோளாறுகளுக்கும், காலத்திற்கு முன் கூட்டியே தலைமயிர் நரைத்துப்போதல், மார்பின் பலவீனம், பேசினாலும், இருமினாலும் ஏற்படுதல், மனச்சோர்வு, மூச்சுவிட சிரமம், வெள்ளையான வலி இல்லாமல் போகும் அதிகமான வயிற்றுப் போக்கிற்கும், (30 முதல் 200 வீரியம் வரை கொடுக்கலாம்.)

## 16. ஆசிட் மூரியாடிகம். Acid Muriaticum.

இந்த ஔஷதமானது ஹெரிங், ஹானிமான் இந்த இரண்டு டாக்டர்களின் உடலிலேயே பரீக்ஷை செய்யப்பட்டு அப்படியே வெளியிடப்பட்ட அற்புதமான மருந்தாகும்.

**முக்கிய குறிகள்:—** கருத்த உடலும், குறிப்பாகக் கண்கள், தலைமயிர் மிகவும் கருப்பாயிருக்கும், புண்களில் நீல நிறம், மூல வியாதியிலும், சாதாரண சமயங்களிலும், அபானத்தைத் தொட்டால் அளவு கடந்த வலி: டைபாயிட் சுரத்தின் கடைசி நிலைமையிலும், மலமும், மூத்திரமும் ஏககாலத்தில் தன்னை அறியாமல் வெளியாகுதல் அவ்வளவு பலவீனம்.

**உபயோகம்:—** (1) டைபாயிட், இன்புளுவென்சா போன்ற கடுமையான சுரங்களில், வியாதியஸ்தரின் விருப்பமின்றி தானாகவே ஏககாலத்தில் மலம், மூத்திரம், வெளியாகுதல், முனங்கிக்கொண்டும், படுக்கையை விட்டு கீழே நழுவுதல், நாக்கு சுரத்தின் கடுமையால் ஈரத்தன்மை அற்று தோல் போன்று சுருங்கிவிடுதல், **வாய் திறந்து கீழ் தாடை தொங்கிவிடுதல்** வாய்நாற்றம், வாயினுள் கரு நீல நிறமுள்ள புண்கள், சிலருக்கு மலம் கருத்தும், நாற்றத்துடனும், கருரத்தம் கலந்தும் இருக்கும், ஷை சுரத்தின் 3-வது வாரத்தில் நோயாளியின் நாடியை, மணிக்கட்டிலோ மார்பிலோ பார்த்தால் மூன்று துடிப்பிற்கு **ஒரு தடவை மறைந்து விட்டு** அடிக்கும். இம்மாதிரி அபாயகரமானதும், மரணக் குறியுமான சமயங்களில் 'ஆசிட் மூரியாடிகம்' கண்டிப்பாய் கொடுத்தால் பெருவாரியான நோயாளிகள் பிழைக்க வழி உண்டு.

(2) துணியோ, கைவிரல்களோ பட்டால் வலி அளவு கடந்தும், வேதனையுடன் வீங்கியும் நீல நிறத்துடனும் அபானம் வெளித்தள்ளி இருக்கும் மூல நோய்களுக்கு 'மூரியாடிக் ஆசிட்டை'க் கொடுக்கவும்.

(3) ஒரு சிலருக்கு அபானத்தின் வழியே வாய்வு பிரியும் போதும், சிறுநீர் கழியும் போதும் மலப்பையானது தளர்ச்சியால் வெளிப்பிதுங்கும் இதற்கும் இந்த மருந்தைக் கொடுக்கலாம்.

**இதர உபயோகங்கள் :**— அபினியை அளவு மீறி சாப்பிட்ட கோளாறுகளுக்கும், காதுகளில் வண்டு ஊதுவது போன்ற ஓசை இருந்து காது செவிடு ஆகுதல், சுரத்தின் காரணமாய் ஏற்படும் காது செவிடுக்கும், தொட்டால் எரிச்சலுடன் ரத்தம் கொட்டும் மூலத்திற்கும் மிக்க உபயோகமாகும் மருந்து. முக்கியமாக பெண்களுக்கு மாத விடாயின் போது மூலநோய் ஏற்படின் சிறப்பாக வேலை செய்யும். பற்களின் மேல்படியும் ஊத்தைக்கும், காரைக்கும் உபயோகிக்கலாம்.

## 17. ஆசிட் சல்ப்யூரிகம் Acid Sulphuric

இது நெல்லிக்காய் கந்தகம் என்ற பொருளை எரித்து ரஸாயன முறையில் தயாரிக்கப்படும் ஓர்வித அமிலமே.

**விசேஷக் குறிகள்:**— வெளிக்குத் தெரியாமல் உடலை உள்ளூர உருக்குலைத்து கடுமையாய்த் தாக்கும். மிகுந்த பலவீனத்தை உண்டாக்கும், அப்பலவீனம் வியாதிக்குத் தகுந்த அளவிற்கும் அதிகமாயிருக்கும். அத்துடன் உடலினுட்புறத்தில் நடுங்கும் உணர்ச்சியும் ஏற்படும்



**உபயோகம்:**— (1) வியாதியில் கடுமையாகத் தாக்கப் பட்டு பின்னர் ஏற்படும் அளவு கடந்த பலவீனத்தை அரைமணி நேரத்திற்குள் போக்கடித்து, வியாதியஸ்தரை பலமுள்ளவராகச் செய்திட 200 வீரியத்தில் ஒருடோஸ் கொடுக்கலாம்.

(2) **தொண்டையிலும், வயிற்றிலும்** ஏக காலத்தில் ஏற்படும் எரிச்சலுக்கும் (அதிலும் மேல் வயிற்றில் பொல்லாத எரிச்சல்.)

(3) புளித்த ஏப்பம், பற்களை கூசச்செய்யும்படியான அளவு வயிற்றில் புளிப்பு ஏற்படுவதற்கும், சில குழந்தைகளின் உடல், குளிப்பாட்டிய பிறகும் கூட புளிப்பு வாடை வீசும். அத்துடன் அக்குழந்தையின் வயிற்றில் ஆகாரம் ஜீரணிக்காமல் புளிப்புத் தட்டிவிடும். குழந்தைகளுக்கு ஏற்படும் வயிற்றோட்ட வியாதியில் மலம் சளிப்பொருள் கலந்தும், மஞ்சள் கலந்த ஆரஞ்சுக் கலர் நிறமாகவும், சிறு சிறு துணுக்குகளுடன் புருச்சென்று வெளிப்படும்

(4) **விஸ்கி, ஜின்னு, பிராந்தி** போன்ற சாராயம் குடிப்பவர்களுக்கு ஏற்படும் ஜீரணக் கோளாறுகளுக்கும், இவர்களுக்கு ஏற்படும் தோல் சம்பந்தமான புண்களுக்கும், (அதிலும் கால்களில் அழுகிய புண்கள்) போதையினால் அடிபட்டோ, காயம்பட்டோ, அவ்விடத்தில் பிறகு வடு, தழும்பு உண்டாகி கறுநீலப் புள்ளிகள் ஏற்பட்டு விடுமானால் இப்புள்ளிகளை இந்த மருந்து மாற்றிவிடும். இம்மாதிரி புள்ளிகள் சாதாரணமாக, எவ்விதமான காயமும், குடிப்பழக்கமும் இல்லாதவர்களுக்குக் கூட ஏற்பட்டு நீடித்திருக்குமானால் அப்பேர்பட்டவர்களுக்கும் அப்புள்ளிகளை ஆற்ற உதவும். படுக்கைப் புண்களையும் ஆற்றும் வல்லமை இதற்கு உண்டு.

(5) **எந்த வியாதியிலும் வலிகள்** சிறுகச் சிறுக அதிகரித்து உடனே திடீரென்று மறைந்துவிடும். இம் மாதிரி அடிக்கடி தோன்றுவதும், மறைவதுமாய் உள்ள சகல வலிகளுக்கும், ஏற்ற மருந்தாகிய "பெல்லடோனா" விற்கு அடுத்தபடியாக இதை உபயோகிக்கலாம். வலிகளுக்கு உதாரணம் :— (1) காதுவலி, (2) முகத்தில் நரம்பு சம்பந்தமான வலி, அல்லது திரேகத்தில் நரம்பு சம்பந்தமான பல்வலி.

## 18. அவீனா சடீவா Avena Sativa.

இது இந்தியாவில் வளருகின்ற ஒருவகைச் செடியின் கிழங்கு, வேர் முதலியவைகளைச் சாறுகப் பிழிந்து எடுக்கப்பட்ட தாய்த் திராவகமே.

**முக்கிய உபயோகம்:— (1) இந்திரிய ஸ்கலிதத்திற்கும்**, முஷ்டிமைதுனம் அல்லது ஆத்மரதம் என்ற இப் பொல்லாத செய்கைக்கு இரையானவர்களுக்கு உண்டாகும் நரம்புத் தளர்ச்சிக்கும், ஆண் தன்மைக் குறைவிற்கும், மிதமிஞ்சிய சிற்றின்ப போகத்தினுல் ஏற்படும் க்ஷீ வியாதிகளுக்கும், ஞாபக மறதிக்கும், மனச்சோர்வுக்கும் நல்ல மருந்து.

(2) **இருதயத் துடிப்பு**, பலவீனம், போன்ற இருதய நோய்களுக்கு 'கிரடேகஸ்" என்ற மருந்துடன், மாற்றி, மாற்றிக் கொடுக்க நல்ல குணம் ஏற்படும். இருதய பலவீனத்தினுல் ஏற்படும் இருமலுக்கு, கிரடேகஸ் q, அவீனா சடீவா q, கல்கேரியா பாஸ் 6x இவைகளை மாற்றி மாற்றிக் கொடுக்க இருமல் நிற்கும். இருதயம் பலப்படும்.

(3) **தீவிர ஜலதோஷத்தின்** ஆரம்பத்தில் தொண்டையில் கறகறப்பும், மூக்கு முனுமுனுத்தலும் ஏற்படுவது சகஜம். அத்துடன் சிறிது குளிரும் இருக்கலாம். அச்சமயங்களில் அவீனா சடீவா q ஜெல்சிமியம் 3x, நக்ஸ்வாமிகா 3x இம்மூன்று மருந்துகளையும் மாற்றி மாற்றி கொடுத்தால் வியாதியைத் தடுத்து, வேறு வியாதிகள் உண்டாகாமல் பாதுகாக்கும்.



## 19. ஆலோ சொகோட்ரினு Aloes Socotrina.

இதை அப்படியே அல்லோபதி டாக்டர்கள் பேதி மருந்தாக உபயோகிக்கின்றனர். ரெடிமேட் பேடண்ட் பேதி மருந்துகளில் இது சேர்க்கப்பட்டே இருக்கின்றது. இதை நாம் வீரியப்படுத்தி சிறந்த முறையில் உபயோகிக்கின்றோம்.

**முக்கிய உபயோகம்:—** மூலம், வயிற்றுக் கடுப்பு, வயிற்றுப் போக்கு முதலிய வியாதிகளிலும், கருப்பையிலிருந்து ரத்தப் பெருக்கெடுத்தல், கருப்பை நழுவுதல், இடம் மாறுதல் இத்தகைய நோய்களுக்கும் மிக்க உபயோகமுண்டு.

(1) **வயிற்றுப்போக்கு** வியாதியில் கீழ்கண்ட குறிகள் இருப்பின் இந்த மருந்து நிச்சயம் குணம் அளிக்கும்.

(a) கொள்ளைக்குப்போக அவசர உணர்ச்சி உண்டான க்ஷண நேரத்தில் போகாவிடின் அபானத்தின் பலவீனத்தால் அப்படியே துணியுடன் போய்விடுதல்.

(b) வயிற்று உப்பி சத்துடன், கடாமுடா என்ற அதிகமான சப்தத்துடன், மலம் வெளியேறும்.

(c) தண்ணீரோ, ஆகாரமோ உட்கொண்ட மறு நிமிஷமே வயிற்றோட்டம் ஏற்படுதல்.

(d) காலையில் தூங்கி எழுந்தவுடன் **அவசர அவசரமாய்** வெளிக்குப்போக நேரிடுதல். வயிற்றுப் போக்கில்

சிலசமயம் படுக்கையில் தான் அறியாமலேயே பெரும் கட்டியாகவும் உருண்டைகளாகவும் மலம் வெளிப்பட்டு விடுதல், சில நேரங்களில் சீதமும் கலந்து வெளிப்படும்.

(2) மூல வியாதிகளில் ஆசனம் **வெளித்தள்ளி**, ஒரு **திராட்சைக் கொத்தைப்போல்** சிகப்பாகக் காட்சியளிக்கும். அத்துடன் அடிவயிற்றில் கனமும், அமுக்கும் உணர்ச்சியும் இருத்தல்; இவ்விதக் குறிகள் குடல், மலப்பை இவைகளிலும் ஏற்படலாம்.

(3) கர்ப்பாசய நோய்களில், கருப்பையில் அதிகமான இரத்தம் சேர்ந்து ஒருவித கனத்த உணர்ச்சியுடன் (யோனிக்கு மேல் உள்ள உட்புறத்திலும் அவ்வித கனத்த வலி உணர்ச்சி ஏற்பட்டு), சுருப்பையிலிருந்து இரத்தப் பெருக்கு ஏற்பட்டால் இம்மருந்து நல்ல குணம் தரும்.

## 20. ஆண்டிமோனியம் க்ரூடம்.
## (Antimonium Crudum.)

இது ஆண்டிமோனி என்ற மருந்தும், சல்பர் என்ற மருந்தும் சேர்ந்த கூட்டு ஔஷதம். பாலர்களுக்கும், வயோதிகர்களுக்கும், வெயில் உஷ்ணம் தாங்க முடியாதவர்களுக்கும் அடிக்கடி உபயோகமாகும் மருந்து.

**விசேஷக் குறிகள்:**— நாக்கில் பால் போன்ற வெண்மை நிறத்தில் அடைபோல கனத்த மாசு படிந்திருத்தல். அளவுக்கு மீறிய ஆகாரங்கள் சாப்பிட்டதினுல், ஏற்பட்ட வயிற்றுக் கோளாருக்கும். வாந்தி யெடுக்க வேண்டிய உணர்ச்சியும், அருவருப்பும் உண்டானபோது கொடுக்க வேண்டிய மருந்து.



**உபயோகம்:**— (1) மலச்சிக்கலும், வயிற்றோட்டமும் மாறி மாறி ஏற்பட்டால் இதைக் கொடுக்கவும்.

(2) குளிர்ந்த நீரில், ஆற்று நீரில் குளித்த காரணத்தினுல் சிலருக்குத் தலைவலி, பல்வலி, வயிற்றோட்டம் போன்ற வியாதிகள் ஏற்படலாம், உடனே ஷெ மருந்தைக் கொடுக்க வியாதி தீர்ந்து விடும்.

(3) வெண்மை நிற மாசுடன், உண்டான, அஜீர்ண சுரத்திற்கும் வேறு சுரத்திற்கும் கொடுத்தால் சுரம் நீங்கும். (சிலருக்கு இரவில் மாத்திரம் சுரம் வரும்) களைப்பும், பலவீனமும், சில சமயம் திடீரென்று மயக்கமும் தோன்றலாம்.

(4) **சிசுக்கள்:**— தாய்ப்பால் குடித்தவுடன் தயிர்ச் கட்டிகளாக வாந்தி எடுக்கும், பிறகு பால் குடிக்க மறுக்கும், அச்சமயங்களில், குழந்தைகளை யாராவது பார்த்தாலும், தொட்டாலும் சிடுசிடுத்துக் கோபமாய் அழும். **முக்கியமாய் சிடுசிடுத்து அழும் குழந்தைகளுக்கு** கொடுக்கவும்.

(5) வாயின் ஓரங்களிலும், மூக்கின் துவாரங்களிலும் ஏற்படும் புண்கள், கொப்புளங்கள் (காய்ந்தும் வெடித்தும் புண்ணுகி விடுதல்) இவ்வியாதிகளுக்கும் நகங்களில் வெடிப்பு, பிளவுபட்டுத் தடிப்பு, கோணல் மாணலாக வளர்தல், இக்கோளார்களுக்கும், சிலருக்குக் கால்களில் ஏற்படும் **'கால் ஆணி'** என்ற வியாதிக்கும் சிறந்த மருந்து. (அதாவது நடக்கும்போது பாதம் தரையில் ஊன்ற முடியாமல் வலி, சரியாக நடக்க முடியாது.)

## 21. ஆண்டிபோனியம் டார்ட்டாரிகம்
## Antimorium Tartaricum.

சளி, கோழை மிகுந்த கைக்குழந்தைகளுக்கும், ஆழ்ந்த மயக்கத்துடன் ஏற்படும் ஆஸ்துமா இழுப்பு வியாதியஸ்தர்களுக்கும், வயோதிகப் பருவத்தில், கோழை, இருமினலும் வெளியேற்ற முடியாது திக்குமுக்கடித்து மூச்சுத்திணரல் ஏற்படும் சமயங்களிலும் உபயோகமாகும் மருந்து.

**உபயோகம்:—** (1) வாந்தி, ஒக்காளம், மிகுந்த பலவீனம், இபிகாக் என்ற மருந்துக்கு **வாந்தி எடுத்த பிறகும்கூட ஒக்காளம்** இருக்கும். ஆனல் இந்த மருந்துக்கு வாந்தி எடுத்த பிறகு ஒக்காளம் இருக்காது. பலவீனம் மட்டும் அதிகமாயிருக்கும் (அதாவது மயக்கம்.)

(2) **காலரா என்ற** வாந்தி பேதியில் நோயாளிக்குக் குளிர்ந்த வியர்வையும், மயக்கமும், களைப்பும், போக்கு தண்ணீர் போன்றும் இருப்பின் இந்த மருந்து உபயோகமாகும். இடையிடையே (காம்பர் Camphor) என்ற மருந்தையும் கொடுக்க வேண்டும்.

(3) நெஞ்சில் கோழைக்கட்டு, 'கொர், குர்,' என்ற பலமான இழுப்பு ஓசை, மூச்சுத்திணரல், இம்மாதிரி உபாதைகள், சுவாசகோச வியாதிகளான **நிமோனியா, பிராங்கைடிஸ், புளூரசி, ஆஸ்துமா** போன்றவைகளில் கபத்தை வெளியேற்ற (குறிப்பாகக் குழந்தைகளுக்கு) உதவும் மருந்து. (சில பெரியவர்களுக்கு, ஷடி வியாதிகளில் மரணக் குறிகளைப்போல், முகம் நீலநிறம், ஜில் என்ற வியர்வை, 'கரட்டு, பிரட்டு' என்ற கபம் இழுக்கும் பலமான ஓசை (அதாவது இறப்பதற்கு முன் சுவாசம் வாங்



வது போன்ற இழுவையான மூச்சு வாங்குதல்) ஏற்பட்டாலும் இந்த ஔஷதம் குணப்படுத்திவிடும்.

(4) **அம்மை, வைசூரி** போன்ற நோய்களில் இதைக் கொடுத்தால், நல்ல குணத்தை உண்டாக்கும்.

## 16-வது அத்தியாயம்.

## 22. ஆர்னிகா மொண்டான (Arnica Montana)

இதை தாய்த் திராவகத்தில் எண்ணெய்யுடன் கலந்து பெண்களின் தலை மயிர் வளர்வதற்கும். மயிர் உதிர்வதைத் தடுக்கவும் உபயோகப்படுத்தலாம். அடிபட்டது போன்றுள்ள வலியுடன் கூடிய சகல வியாதிகளுக்கும் **உபயோகமாகும் மருந்து உதாரணமாக, டைபாயிட், கீழ்வாயு சத்தசூலை, வாதரோகம், பிரஸவத்திற்குப் பின் வரும் நோய்கள்.**

**முக்கிய உபயோகம்:—** (1) டைபாயிட் (Typhoid Fever) என்ற ஜன்னிபாத சுரத்தில், உடம்பு அடித்துப் போட்டால் போன்ற வலியுடன், படுக்கையில் தூக்கம் வராமல், இங்கு மங்கும் புரளுதல் (எவ்விதமாகப் படுத்தாலும் நொந்து வலித்தல்) படுக்கை எவ்வளவு மிருதுவானதாயிருந்தாலும், கல்லைப்போல் கடினமாயும், கரடுமுரடாய்த் தோன்றுதல். பிரக்ஞை இல்லாதிருப்பார், கூப்பட்டால் பதில் கூறுவர், மறு நிமிஷமே மயக்கத்திலிருப்பார். சுரத்தின்போது சிலருக்குக் கழுத்தும், தலையும் சூடு கொதிக்கும், மற்ற எல்லாப் பாகமும் ஜில்லென்று குளிர்ந்திருக்கும்.

(2) நாள்பட்ட **கீல்வாயு** என்ற ரூமாடிசம் போன்ற வியாதிக்குத் தகுந்த மருந்து. இம்மாதிரி நோயுற்ற சமயங்

களில், நோயாளிக்கு ஒரு குறிப்பிட்ட மனக்குறி காணப்படுகின்றது. அதாவது யாரையும் தன்னருகில் வரவோ, தொடவோ, விடமாட்டார். ஏனென்றால் யாரேனும் வலியுள்ள பாகத்தை தொட்டுவிட்டால் வலி கடுமையாகி விடுமோ என்ற பயத்தினால் அலறுவார்கள். அபோப்ளக்ஸி என்ற மூளை நோயுக்கு முதலில் கொடுக்கலாம். இடது பக்கப் பாரிச வாதம் (வாயு) குறிப்பாக 'அபோப்ளக்ஸி' என்ற மூளை அழற்சி நோயிற்குப் பின் வந்தால் இதைக் கொடுக்கவும்.

(3) பெண்களுக்குப் **பிரஸவித்தபின்** சாதாரணமாக இந்த ஆர்ணிக்காவை 6x வீரியத்தில் 3 தடவைகள் கொடுத்தால் வலியைக் குறைத்து, சிரமத்தைப் போக்கி, இரத்த ஒழுக்கு ஏற்படாமல் காப்பாற்றும். பிரஸவத்திற்குப் பின் வரும் காச்சலை (சுரத்தை) நிறுத்தும். நீர் (மூத்திரம்) பிரியாமல் இருந்தால் நீரைப் பிரித்து வெளியேற்றக் கூடிய அற்புதமான மருந்தாகும்.

(4) சிறு பாலர்கள் ஆடி ஓடித் திரியும் பருவத்தில் கீழே விழுந்து அடிபட்டதின் காரணமாக, உடனேயோ, அல்லது சில மாதங்கள், வருடங்கள் கழித்துத் திரேகத்தில் ஏற்படும் கோளாறுகள், உடலின் எந்த பாகத்திலிருந்த போதிலும் ஆர்ணிக்காவைக் கொடுங்கள்; உதாரணமாக ஒரு ஆண் குழந்தைக்கு பீஜத்தில் (Testicle) அடிபட்டதின் காரணமாக, வீக்கம் உண்டாகி, வீக்கத்திற்குப் பல வைத்தியம் செய்தும், வீக்கம் குறையாமல் இருந்து, சில வருடங்கள் சென்றபின் நமது சிகிட்சைக்கு வரவே, ஆர்ணிக்காவை 30 வீரியத்திலும், 200 வீரியத்திலும் கொடுத்துக் குணமேற்பட்டிருக்கின்றது. ஆகையால் இத்தியாதி அடிபட்ட காரணங்களினால் வரும் தலைவலிக்கும் மூக்கில் ரத்தம் வருதல் இவற்றிற்கும் இம்மருந்தைக் கொடுங்கள்.



**கவனிப்பு:**— ஊமைக்காயங்களுடன் (சிராய்ப்பு இல்லாமல், இரத்தம் வராமல், இருக்கும்படியான காயங்கள்) வீக்கம் இவற்றிற்கு மட்டும் மேல் பூச்சாகவும் உபயோகிக்கலாம்.

தோலில் (சர்மத்தில்) கருப்புக் கலந்த நீலநிறத் திட்டுகளுடன், ஏற்படும் சகல வலி, நோய்களுக்கு உள்ளே 6 முதல் 30 வீரியம் வரைக் கொடுக்கலாம்.

N. B. அடிபட்டகளுக்கு, வீக்கம், இவைகளுக்கு ஆர்ணிக்காவை 4 டோஸ் கொடுத்த பின், ரஸ்டாக்ஸ் கொடுக்கலாம்.

## 23. ஆர்ஸனிகம் ஆல்பம் Arsenicum Album.

தமிழில் வெள்ளைப் பாஷாணம் என்று அழைக்கப்படும் ஒருவகை விஷப் பொருளில் தயாரிக்கப்படும் மருந்து.

இதன் முக்கிய குறிகள்: (1) **அமைதியின்மையால்** அங்குமிங்கும் அதிகமாக அசைந்து கொண்டேயிருத்தல், (2) அதிக பலவீனம், (3) **எரிச்சல்** (4) **தாகம் தண்ணீரை கொஞ்சம் கொஞ்சமாக அடிக்கடி** குடித்தல், (5) வியாதிகள் எல்லாம், நடு இரவிலும், அல்லது நடுப்பகலிலும் அதிகமாகுதல். (12 to 2 P. M.)

**உபயோகம்:**— (1) அதிக அமைதியற்ற ஔஷதங்கள் நமது மெட்டீரியா மெடிகாவில் 'அக்கோனைட், ஆர்சனிகம், ரஸ்டாக்ஸ்' என மூன்று உண்டு. மற்ற இரண்டைக் காட்டிலும் ஆர்ஸனிகத்தின் அமைதியின்மை வியாதி ஆரம்பித்து 2 தினங்கள் சென்றபின் 4, 5வது தினங்களில்

உடல் பலம் குறைந்த பிறகு **அதிகமாக** ஏற்படும், அக்கோனைட்டிற்கு **வியாதியின்** ஆரம்பத்திலேயே உச்சநிலையில் அமைதியின்மை ஏற்பட்டுவிடும்.

**ரஸ்டாக்ஸிக்கு** அமைதியின்மை முதலில் தோன்றி பிறகு படிப்படியாக வியாதி அதிகரிக்கும்.

**சுரம்** :— சாதாரண சுரம், **டைபாயிட் காய்ச்சல் வியாதியில்**, பெரியவர்களுக்கு மேலே சொன்ன, முக்கியக் குறிகளான தாகம், எரிச்சல், மட்டும் இருந்து, அமைதியின்மை காணப்படாவிட்டாலும், நோயாளியின் பாதம், கணுக்கால், முழங்கால் வரையிலும், குளிர்ந்தும், மற்ற பாகங்களில் சூடு அதிகமாயும் இருந்தால் ஆர்ஸனிக்கம் தான் ஏற்ற மருந்து.

(2) **குழந்தைகளுக்குத் திடீரென்று தோன்றும் கடுமையான காச்சலுக்கு** முதலில் 4 டோஸ் வரை அக்கோனைட் கொடுத்தும், குணம் ஏற்படாவிட்டால், ஆர்ஸனிகம் 6x or 30 ஒரு டோஸ் கொடுத்தால் நிற்கும்; ஆனாலும், மேலே *குறிப்பிட்ட ஏதாவது ஒருகுறி இருந்தே தீரவேண்டும்.

(3) **தாழ்ந்தும், நீடித்தும்** இருக்கும் எந்த சுரத்திற்கும், டைபாயிட் நோய் ஆரம்பித்து 8 தினங்கள் சென்ற பின்னரும், "ஆர்ஸனிக்கம்" கொடுக்க நோய் தணியும்.

(4) **வயிற்றுப் போக்கில்**, முகம் வெளுத்து பயங்கரமான தோற்றத்துடன், அதிக பலவீனமும், மிகவும் சிரமத்துடன் மூச்சு விடுதலும், முழங்காலுக்குக் கீழே பாதம் குளிர்ந்தும் இருந்தால், ஆர்ஸனிக்கம் தேவைப்படும்.



முற்றிய கேஸ்களில், தாகம், எரிச்சல் இருக்காது. (ஆனால் ஆரம்பத்தில் போக்கு கருப்புக் கலந்தும், குழம்பலாயும், தண்ணீராகவும் போவதுடன், ஆசனத்தில் சுண்ணும்பை வைத்தாற் போன்றுள்ள எரிச்சலுடன், தாகம் இருந்திருக்கும்.)

(5) **ஆஸ்துமா வியாதிக்கு சிற்சில** சமயங்களில் தான் உபயோகப்படுகின்றது. அதாவது நடு இரவில் படுக்கவிடாமல் (மூச்சு திணரல் உண்டாகி) உட்கார்ந்தே இருக்கக் கூடிய வியாதியஸ்தருக்குத்தான் உபயோகப்படுகின்றது.

**கவனிப்பு** :— (a) எந்த வியாதியிலும் பிராண பயம் (சாவுப் பயம்) இருக்கும் தருணத்தில் அக்கோனைட் கொடுத்தும் குண ஏற்படாத கேஸ்களுக்கு ஆர்ஸனிக்கம் கொடுக்கலாம். (b) வியாதியின் கடுமைக்குத் தகுந்தாற் போல அமைதியின்மை, பிராண பயம், தாகம், அசதி (அசந்த நிலைமையிலும் கூட வியாதியஸ்தர் படுக்கையில் நிலை கொள்ளாமல், இங்கு மங்கும் புரண்டு, அசைந்து கொண்டிருப்பார். (c) உடம்பில் உள்ளேயும், வெளியேயும் எரிச்சல் கடுமையாக இருந்தாலும், நோயாளி குளிர்ந்த காற்று மேலே படாதவாறு போர்த்திக் கொள்வர். உடம்பின் மேலே குளிர்ந்த தண்ணீர், காற்று படுவது பொறுக்க முடியாது; சூடான பானம் அருந்தினால் சிறிது சுகமாகத் தெரியும்.

**நோய் தணியும் குறி** :— சூடான பானம், குடித்தல், போர்த்திக் கொள்ளுதல் நெருப்பின் அருகே இருத்தல், (**நடுப்பகல், நடு இரவு 12 மணி முதல் 2 மணி** வரை நோய் அதிகரிக்கும் குறியாகும்.)

**எச்சரிக்கை** :— எந்த வியாதியிலும் ஆரம்பத்தில் இதன் குறிகள் காணுவிட்டால் கொடுக்கக் கூடாது. மலேரியா போன்ற குளிர் சுரத்தில் குளிரும்போது மட்டிலும் தாகத்திற்கு சூடான தண்ணீர் கொடுக்க வேண்டும். ஆனால் வியாதியஸ்தருக்கு சூடான தண்ணீர் வேண்டாமென்று குளிர்ந்த தண்ணீர் குடிப்பாராகில் கண்டிப்பாய் ஆர்சனிக்கம் கொடுக்கக் கூடாது.

**அனுபவக் குறிப்பு** :— குழந்தைகளுக்கு, சதா மூக்கில் சூடான நீர்வடிந்து கொண்டும், மூக்கின் துவாரங்கள் சிவீரென்று சிகப்பாகவும், ஜலதோஷ வியாதி அடிக்கடி ஏற்பட்டு, கார குணமுள்ள நீர்வடிந்த பாகம், சிவந்தும், காணப்படுவதற்கு முதலில், 'அல்லியம்பா' கொடுத்தும் பலன் ஏற்படவில்லை, பின்னர் கடேசியாக, ஆர்ஸனிக்கம் கொடுத்துக் குணம் ஏற்பட்டது. (சல்பர், நக்ஸ்வாமிக்காவையும் வேறு சில கேஸ்களுக்கு மாற்றி, மாற்றி, ஆர்ஸனிக்கத்துடன் கொடுத்து, ஷை நீர் வடிதலை நிறுத்த முடிந்தது.)

## 24. ஆரம்மெட்டாலிகம் Aurum Metallicum.

ஆரம் என்றால் தங்கம் என்று பொருள். நம் நாட்டில் சித்தர்களாலும், முன்னோர்களாலும், தாதுபுஸ்டிக் கென்று, தங்கத்தை பஸ்பம், சுண்ணங்களாக மாற்றி, அதனுடைய நல்ல பலனை அனுபவித்து, கண்டுள்ள சாராம்சமே; Dr. ஹானிமானும் 1818-ம் ஆண்டில் தங்கத்தை வீரியப் படுத்தி வியாதியை நீக்கும் சக்தியை வெளியிட்டார். அல்லோபதி என்ற இங்கிலீஸ் வைத்திய முறையிலும் தங்கத்தை மருந்துப் பொருளாக உபயோகிக்கின்றார்கள்.



**இதன் முக்கியமான மனக்குறி** :— இதைக் கொடுக்க வேண்டிய வியாதியஸ்தருக்கு, வியாதி எதுவானாலும், தன் வியாதி தீராது என்ற மன ஏக்கத்துடன், வாழ்க்கையை வெறுத்து, தன்னுயிரைத் தற்கொலை செய்து கொள்ள வேண்டும் என்ற எண்ணம், முயற்சி தீவிரமாக இருக்கும். இம்மாதிரி தற்கொலை எண்ணம் ஏற்பட்டவர்களுக்கு 'ஆரம்' கொடுத்தால் எல்லா வியாதியும் தீர்ந்துவிடும்.

**உபயோகம்** :— (1) விலைமாதர் சேர்க்கையால் விளைந்த கிரந்தி நோய்க்கும், அந்நோய் முற்றி அதனால் எலும்புகள் பாதிக்கப்பட்டிருப்பதற்கும், (எலும்பு, அழுகி நீர்வடிதல்) அறியாமையால், அவ்வியாதிக்கு ரசம், ரச சம்பந்தமான மருந்துகளை அடிக்கடி சாப்பிட்டதினால் ஏற்படும் கெடுதல்களை நீக்குவதற்கும் நிகரற்ற ஔஷதமாகும்.

(2) தாடை எலும்பு, எலும்பு மூட்டுகளைச் சுற்றியுள்ள குருத்தெலும்புகள், கல்போல் கடினமாகி பருத்து வீங்கி விட்ட சமயங்களில் இதைக் கொடுக்க கடினமாயிருப்பது மிருதுவாக மாறும். வீக்கமும் குறையும்.

(3) இருதய நோய்களுக்கும் கொடுக்கலாம். இருதயம், கல்லீரல் கோளாறுகளில் ஏற்படும் நீர்சுரப்பு வியாதிக்கும் சிறந்தது.

(4) சுரப்பிகள் உதாரணமாக, காது பக்கமுள்ள சுரப்பிகள், அரையிடுக்கிலும் ஸ்தனங்களிலும் உள்ள சுரப்பிகள், கீழ்தாடை சுரப்பிகள் தாக்கப்பட்டு, கல் போன்ற கடின கட்டிகளாக மாறி, வீக்கமும், வலியும் தோன்றின சமயங்களில் கொடுக்க மிக அற்புதமான சஞ்சீவியாக இருக்கின்றது. (அனுபவத்தில் கண்ட உண்மை)

(5) **கர்ப்பப்பை வீக்கம், பீஜம் என்ற விரை வீக்கம், கல்லீரல் வீக்கம்** இவைகளுக்குக் கொடுக்க குணம் காணலாம்.

## 25. இபிகாக் உவ Ipecacuanha.

இம்மருந்தின் முக்கியக் குறிகள் :— வெறும் வயிற்றில் குமட்டல், வாந்தி, வாந்திக்குப் பின்னரும், குமட்டல். இடைவிடாத குமட்டலுடன் வாந்தி எடுக்கும் எந்தவித மான வியாதிக்கும், கொடுத்தால், நொடிப்பொழுதில் நோய் கள் தீரும். சுத்தமான நாக்கு, உமிழ்நீர் ஏராளமாய் உற் பத்தியாகுதல். சுத்த ரத்தம் வெளியேறுதல்.

**உபயோகம்** :— (1) கர்ப்பிணி. (கருவுற்ற பெண் களுக்கு ஏற்படும் ஏராளமான உமிழ்நீரை, நிறுத்துவதற்கும் மசக்கை வாந்தியை கட்டுப்படுத்துவதற்கும் ஏற்ற மருந்து.

2) திடீரென்று, மூக்கிலிருந்தோ, நுரையீரலி லிருந்தோ, வயிற்றிலிருந்தோ, கெர்ப்பப்பையிலிருந்தோ ஏற்படும் இரத்தப் பெருக்கை நிறுத்துவதற்கு மிக முக்கிய மான மருந்து. ஆனால் ௸ முக்கியக் குறியான குமட் டலும், இரத்தம் நல்ல சுத்த சிவப்பாகவும் இருக்கவேண்டும். (போக்கு ஒரே அளவில் போகும்) கோழையில் சிவப்பு ரத்தம் கலந்திருப்பதற்கும் நல்ல மருந்து.

(3) தலைவலி :— அஜீர்ணம், வாய்வு அதிகரிப்பு, இக் காரணத்தினால் ஏற்படும் தலைவலிக்கு, குமட்டல், ஓக்காளம், வாந்தி ஏதேனும் ஒருகுறி இருந்தாலும், 'இபிகாக்' கொடுக் கலாம்.



(4) **சீதபேதி** :— குமட்டலுடன், ஏற்படும் அஜீர்ண வயிற்றுப் போக்கிற்கும் (மலமானது நுரைத்தும், புளிப்பு நாற்றத்துடனும் இருக்கும், அல்லது புல்லை (Grass) ப்போன்ற பச்சை நிறமாயும் இருக்கும், வயிற்று கடுப்பில், ரத்தமும், சீதமும் ஏற்படலாம். (ரத்தம் நல்ல சிகப்பாக இருக்க வேண்டும்.) குழந்தைகளுக்கு வெயில் காலங்களில், ஜீர்ணமாகாத பொருள்களைத் தின்ற காரணத்தினால் ஏற் பட்ட ௸ நோய்களுக்கு 'இபிகாக் 200' வீரியத்தில் ஒரு டோஸ் கொடுத்தால் உடனே நின்று விடும்.

(5) பித்தக் கற்களினால் ஏற்படும் வயிற்றுவலி, தொப்பூளைச் சுற்றி வெட்டும் வயிற்றுவலி, (வலியானது இடது பக்கமிருந்து அடிவயிற்றின் குறுக்கே வலது பக்கம் போய்த் தங்கும்) 'இபிகாக் குணம் செய்யும்'

(6) **சுரம்** :— குழந்தைகளுக்கு சுரத்துடன் பின்னர் ஏற்படும் கணைக்கும் (கணைவந்த சமயம், குழந்தை நீல நிறம் பூத்து, விறகுக் கட்டையைப் போல விறைத்துவிடும். உடனே 6x வீரியத்தில், 15 நிமிஷத்திற்கு ஒருதடவை வீதம், ஊசி மூலம் செலுத்தவேண்டும். வாய் திறந்திருந் தால், வாயில் போட்டு சிறிது சுடு தண்ணீர் ஊற்ற வேண்டும். **மலேரியா சுரத்திற்குக் கைகண்ட மருந்து.** கொய்னா, **ஆர்ஸனிக்கம்**, அளவுக்கு மீறி கொடுத்தும் தீராத மலேரியா சுரத்திற்கும் கொடுத்தால் குணம் காண லாம்.

(7) **ஆஸ்துமா, நிமோனியா, இருமல், கக்கு வானிருமல்** இவ்வியாதியை உடையவர்களுக்கு எவ்வளவு இருமினாலும் கோழை வெளிப்படாத காரணத்தால், கபம் மார்பில் அதிகமாய்த் தங்கி, தொண்டையை அடைப்பது போன்ற உணர்ச்சியுடன், குமட்டலும் இடைவிடாத இருமலும் இருக்கும். இதற்கு 'இபிகாக்' ஒரு சஞ்சீவியே.

## 26. இக்னேஷியா Ignatia.

இவ்வியாதியஸ்தர் மிக எளிதில் உணர்ச்சி வசப்படுபவராயும், சங்கா குணம் என்ற ஹிஸ்டீரியா நோய்க் குறிகளின் தன்மை உடையவராயும் இருப்பார். மேலும் இவ்வியாதியஸ்தர் ஒருசமயம் சந்தோஷத்திலும் மறுசமயமே மிக வருத்தத்திலும் இருப்பார். மிக முக்கியமான விசேஷக் குறிகள், அதாவது ஒரு வியாதிக்கு ஏற்பட்ட சிரமமான குறிகள் ஒவ்வொன்றிற்கும் விரோதமான, முரண்பாடுடைய குறிகள் தான் காணப்படுகின்றது கீழே காண்க.

**உபயோகம்** :— (1) காது இரைச்சல் இருந்து, காது கேளாது இருக்கும் சமயங்களில், கடைத்தெரு, சந்தைக் கூட்டம் முதலிய இரைச்சல் அதிகமுள்ள இடங்களுக்கு அவ்வியாதியஸ்தர் சென்றால் அப்பொழுது மட்டும் காது இரைச்சல் விலகி காதும் கேட்கும்.

(2) வயிறு காலியாக இருப்பது போன்ற, ஒன்றுமே இல்லாத உணர்ச்சி ஏற்பட்டிருக்கும். அது சமயம் வயிறு நிறைய அளவுக்கு அதிகமாகவே, விலாப்புடைக்க உணவு உட்கொண்ட போதிலும், அந்த உணர்ச்சி அவ்விதமே இருக்கும்.

(3) தொண்டையில் புண் இருந்தால், எது சாப்பிட்டாலும் குடித்தாலும் வலி எடுப்பது சகஜம், ஆனால் இந்த இக்னேஷியா கொடுக்க வேண்டிய நோயாளிக்கு மிகவும் கடினமான, கெட்டியான உணவுகளை விழுங்கும்போது **கொஞ்சம் கூட வலி** இருக்காது. ஆனால், தண்ணீர் போன்ற பானங்களை குடிக்கும்போது **கடுமையான வலி** ஏற்படும். மேலும் சும்மா, வெறுமனே, சாப்பிடாமல் இருக்கும் நேரத்திலும் வலிக்கும்.



(4) **மலேரியா, முறைசுரம்** போன்ற வியாதிகளில் குளிர் எடுக்கும்போது தான் தாகம் எடுக்கும். சுடு காயும்பொழுது (காய்ச்சல் அதிகமாக இருக்கும்பொழுது) **தாகம் எடுக்காது**. குளிரும் பொழுது முகம் சிவப்பாகி விடும்; வெய்யலில் இருந்தாலும் கம்பளியைக் கொண்டு போர்த்திக் கொண்டாலும் குளிர் குறையும், சுரம் அடிக்கும் போது போர்த்திய வண்ணம் இருந்தால் சுரம் அதிகமாகி விடும்.

(5) **பல்வலியானது சாப்பிடும்போது இல்லாமல்**, மற்ற சமயங்களில் வலி இருந்து கொண்டேயிருக்கும்.

(6) **முக்குக் கழி என்றழைக்கும்**, நோயில் குழந்தைகளுக்கு அடிக்கடி, மலம் கழிக்கும் போதெல்லாம், ஆசனம் (மலப்பை) வெளித்தள்ளும்; இக்னேஷியாவைக் கொடுத்த பின்னர், சைலு 6x என்ற மருந்தைக் கொடுத்தால் பூர்ண சுகம் உண்டாகும்.

(7) பெரியவர்களுக்கு, மூலநோய் அதிகரிப்பின்போது உட்கார்ந்தால் அதிகமாயும், எழுந்து நடந்து கொண்டிருந்தால் மிதமாயும்: மலம் கழிக்க வேண்டும் என்ற உணர்ச்சி அடிக்கடி உண்டாகும், ஆனால் கொள்ளைக்குப் போனால், மலம் வருவதில்லை, பிரயத்தினம் செய்து முக்கின காரணத்தால், மலப்பை வெளியே வந்துவிடுகின்றது. சிலருக்கு, மலம் வெளியான பிறகு, சுமார் 2 அல்லது $2\frac{1}{2}$ மணி நேரம் வரை அபானத்தில் கடுமையான வலி தாங்க முடியாமல் இருக்கும். இம்மாதிரி குறி உள்ள 'வயிற்று கடுப்பு' என்ற வியாதிக்கும் 'இக்னேஷியாவை' கொடுக்கலாம்.

(8) **பயந்த கோளாறுகளுக்கும்**, குழந்தைகளை கண்டித்து அளவுக்கு மீறி தண்டித்த காரணங்களினால் அவர்களுக்கு ஏற்பட்ட சுரங்கள், வலிப்புகள் போன்றவை

களுக்கு இக்னேஷியா சிறந்த மருந்து. பயம் என்றதற்கு அக்கோனைட்டமும் சிறந்த மருந்துதான். வலிப்பில் தசைகள் துடிப்புதான் ஏற்படும். வெட்டி, வெட்டி இழுக்கும் படியான வலிப்புகள் ஏற்படாது.

(9) **தலைவலி** :— ஒருபக்க தலைவலி, அடிக்கடி வலிமாறிக் கொண்டிருக்கும். இத்தலைவலிக்கு, வியாதியஸ்தரின் தலையினுள்ளே ஒரு ஆணியை வைத்தடிப்பது போன்ற வலி இருக்குமானால் கண்டிப்பாய் கொடுக்கவும். மேலும் வியாதியஸ்தருக்கு வலியுள்ள பாகத்தை கீழே வைத்து அமுக்கிக் கொண்டிருந்தால் சற்று வலி குறையும். நரம்பின் பலவீனமும், ஹிஸ்டீரியா வியாதியும் உடைய பெண்களுக்கு ஏற்படும் தலைவலிக்கும் சிறந்த மருந்து. ஹிஸ்டீரியா நோயும் விலகும். இந்நோய் ஸ்திரீகளுக்குத் தான் அதிகமாக ஏற்படுகின்றது. ஆண்களுக்கு அவ்விதம் இல்லை.

(10) நாள்பட்ட துக்கத்தினால் ஏற்படும் வியாதிக்கும், அவ்வியாதியஸ்தர்தான் வருந்தும் துக்கத்தை பிறர் அறியாமலிருக்க மறைப்பாராயின், இக்னேஷியாதான் கொடுக்க வேண்டும். (அதாவது தன் துக்கத்தை அயலார் யாரிடமும் காண்பித்துக் கொள்ளாமல் தனக்குள்ளே அனுபவிக்கும் சுபாவம்.)

(11) மாதவிடாய் தடைபட்டு விடுதல், அல்லது வெகு சீக்கிரமாகவும், அதிக அளவிலும் சூதகம் போகும். மாதவிடாய் போக்கு கட்டி கட்டியாகவும், கருப்பு நிறத்துடனும் இருக்கும். வெள்ளை ஒழுக்கு அதிகரித்தும், எரிவுடனும், பிரசவ வலிபோன்ற உபாதையுடன் கூடியிருக்கும். இக்கோளாறுகளுடன் கூடியவர்களுக்கு ஏற்படும் ஹிஸ்டீரியா நோயுக்கு முதன்மையான மருந்து.

## 27. எக்கினீஷியா அங்குஸ்டிபோலியா
## Echinacea Angustifolia.

இந்த மருந்து தாய்த் திராவகமாகத்தான் உபயோகப்படும்.

**முக்கிய உபயோகம்** :— இரத்தத்தில் விஷப்பொருள்கள் கலந்து கெட்டுப்போன தருவாயில் ஏற்படும், டைபாய்டு, பிரஸவத்திற்குப்பின் தோன்றும் சுரங்கள், சிரங்கு அழுகிய ரணங்கள், பிளவை இவைகளுக்குக் கொடுத்தால், இரத்தத்தை சுத்திசெய்து ஷி வியாதிகளை நீக்கும்.

உடல் சோர்ந்தும், பலவீனமாயும், புன் உள்ள வலியுடனும், வயிற்றில் வலி திடீரென்று தோன்றி அவ்விதமே மறைவதும்; அவர்களுக்கு முதுகுப்புறம் ஒரு சமயம் ஜில்லிப்பாயும், மறுசமயம் சூடாகவும் இருக்கும்.

(1) நோய்வாய்ப்பட்ட சிலருக்கு படுத்த படுக்கையில், பலநாட்கள் படுத்திருந்து ஏற்பட்ட **படுக்கைப் புண்களுக்கு** உள்ளேயும் கொடுத்து, வெளியேயும் சுத்தம் செய்து, மேல் பிரயோகமும் செய்தால், சுகமாகிவிடும்.

(2) **பூச்சிகடிகளுக்கும், விஷ கடிகளுக்கும்** முக்கியமான மருந்தாகும். அதாவது பாம்புகடிகளுக்கு, **செட்ரான்** என்ற மருந்தையும் **எக்னீஷியாவையும்** மாற்றி மாற்றிக் கொடுக்க, குணம் காணலாம். அத்துடன்,

**யூர்டிகாயூரென்ஸ்** என்ற மருந்தானது, **தேள் கடிக்கும், தேனீக்களின் கடிகளுக்கும்** உபயோகமாகின்றது.

பொதுவாக சகல விஷகடிகளுக்கும், **எக்னீஷியா செட்டான் 3x, யூர்டிகாயூரென்சும்** Q மாற்றி, மாற்றிக் கொடுக்கலாம்.

## 28. எதூசா சைனபியம் Aethusa Cynapium.

இது சிறு குழந்தைகளுக்கு 'பால் எடுத்தல்' என்ற நோய்க்கும், வயிற்ருேட்டம் என்ற வியாதிக்கும் கொடுக்கக் கூடிய, பாலசஞ்சீவியாகும். சில தாய்மார்கள் தாய்ப்பால், புட்டிப்பால் இவைகளை குழந்தைகள் அழும்போதெல்லாம், பசி என்று அடிக்கடி புகட்டுவதினுல், அந்தப்பால் அளவுக்கதிகமாகி இரைப்பையில் சிறிது அதிக நேரம் தங்கி **புளிப்பு ஏறி அஜீர்ண நோய்** ஏற்பட்டு கட்டி கட்டிகளாக, வாயாலெடுக்கப்படும். அவ்விதமான வாந்தியானது புளித்த நாற்றத்துடனும், தயிர்கட்டி போன்றும், குழந்தை பால் சாப்பிட்ட சிறிது நேரத்திற்கெல்லாம் வெளியேற்றப் படும். அதனுல் குழந்தைக்கு, தளர்ச்சி ஏற்பட்டு **களைப்புடன்** காணப்படும். சில குழந்தைகளுக்கு சாப்பிட்ட **உடனேயும் வாந்தியாகலாம்,** வேறு சில குழந்தைகளுக்கு, வயிற்றுப் போக்கும், வயிற்றுவலியும் மாந்தம் என்று சொல்லும்படியான, **மாந்த இழுப்பும், இசிவு, வலிப்பு, கண் சொருகுதல்** முதலான கெடுதல் குறிகளும் ஏற்படலாம் இக்குறிகளில் விசேஷமான குறி என்னவென்ருல், மாந்த இசிவு ஏற்பட்ட சமயத்தில் கண்கள் இரண்டும் **கீழ்நோக்கி** (கீழ்பக்கமாக) சொருகப்படும். அத்துடன் கால் கட்டை விரல்கள் **உள்பக்கமாக** மடக்கப்படும். இதற்கு மிகவும் சிறந்த மருந்து. இக்குழந்தைக்கு, காய்ச்சல் அடிக்கும்போதும், மற்ற சமயங்களிலும் தண்ணீர் தாகம் இருக்காது. தாகம் அடிக்கடி இருப்பின், அப்பொழுது **'ஆர்ஸனிக்கம்'** என்ற மருந்துதான் கொடுக்க வேண்டும்.



வயிற்றுப்போக்கில் மலம் புளிப்பு நாற்றத்துடன் இருந்து, வாந்தி எடுக்காவிட்டால், **'நேட்ரம் பாஸ்'** என்ற உபயோகெமிக் மருந்து கொடுக்கலாம்.

## 29. எரிகரான் Erigeron.

இரத்த ஒழுக்கிற்கும், மூத்திரப்பை அறழ்ச்சிக்கும் கொடுக்கக் கூடிய மருந்து.

**உபயோகம் :—** (1) வயிறு, குடல், மூக்கு போன்ற உறுப்புகளிலிருந்தோ, அல்லது மூல வியாதியில் அபானத்திலிருந்தோ, அல்லது கல்லடைப்பு, கனேரியா போன்ற வியாதிகளில், மூத்திரப் பையிலிருந்தோ ஏற்படும் இரத்தப் பெருக்கிற்கு கீழ்கண்ட குறிகள் இருந்தால் மிகவும் சிலாக்கியமான மருந்தாகும்.

**முக்கியக் குறிகள் :—** (1) மூக்கிலிருந்து ஏற்படும் இரத்தப் பெருக்கின்போது முகம் சிவந்தும், நல்ல சுத்தமான' பிரகாசமான சிவப்பு ரத்தமும் வெளியானுல், **அத்துடன் மலப்பையிலும், மூத்திரப்பையிலும்,** கடுமையான வலிகள் இருக்கும்.

(2) உடலின் வேறு பகுதிகளிலிருந்து ஏற்படும் இரத்தப் பெருக்கு வியாதி எதுவாயினும் நல்ல சுத்த சிவப்பு ரத்தத்துடன் ஷி வலிகள் ஏற்படுமானுல் எரிகரான் தான் கொடுக்க வேண்டும். சரீரத்தின் பாகங்களில் வலி

ஏற்படாமல், நல்ல சுத்த ரத்தம் மட்டும் வெளியாகுல் அதற்கு '**மில்லிபோலியம்**' ஏற்ற மருந்துதான் கொடுக்க வேண்டும்.

## 30. ஐயோடியம் (Iodium)

அடிக்கடி, அகோரப்பசி எடுத்தல், சதா சாப்பிட்டுக் கொண்டே இருந்தாலும், உணவின் சாரம் உடலில் சிறி தளவுகூட சேராமல், சரீரம் மெலிந்து இளைத்துக்கொண்டே வரும். பசி எடுத்ததும் சாப்பிட்டால் தான் வியாதியின் கடுமை சற்று குறையும், சாப்பிடாமல் இருந்தால் உபாதி அதிகப்படும். உடல் இளைத்துவிடுவதோடு, திரேகத்தின் சுரப்பிகள், சதைக் கோளங்கள் பெருத்து கடினமாகிவிடு தலும், **உதாரணமாக** தைராய்டு சுரப்பிகள் பருத்து கட்டி களாக மாறி **கண்டமாலை** என்று அழைக்கக்கூடிய வியாதியஸ்தர்களுக்கு ஏற்ற மருந்து ஷை **அகோரப்பசி யுடன்** இளைத்துவரும், குறிகளுடன் ஏற்பட்ட கண்ட மாலை நோய்க்கு, **பௌர்ணமிக்கு** பின்னரும், **அம்மா வாசைக்கு** முன்பும், தேய்பிறை நாட்களில் உயர்ந்த வீரி யங்களில் ஐயோடியத்தைக் கொடுத்தால் மிகவும் நன்ருக வேலை செய்கின்றது.

மேற்கூறிய **பசி, இளைத்தல், சுரப்பிகள் பெருத்தல்** உடல் வாகை உடையவர்கள், பாலர் முதல் விருத்தர் வரை, ஆண், பெண் இருதரப்பினர்களுக்கும் உண்டான எவ்வித உபாதைகளுக்கும், மிகப்பொருத்தமான நம்பிக்கையுள்ள மருந்தாகும்.

(1) குறிப்பாக பெண்களுக்கே ஏற்படும் வியாதி களான **வெள்ளை ஒழுக்கிற்கும், பெரும்பாடு** என்றழைக் கும்படியான இரத்தப் பெருக்கிற்கும், யோனிப்புற்று நோய் களுக்கும் முன் சொன்ன குறிகள் இருந்தால் மிகச் சிறந்த மருந்து. நிச்சயம் குணம் காணலாம். **பெண்களின் ஸ்தனங்களிலுள்ள** கோளங்கள், சுரப்பிகள் மட்டும் பெருக்காமல் **இளைத்து சுருங்கும்.**



(2) நீடித்த நோயினுல் அவஸ்தைப்படுபவர்களுக்கு, திடீர் திடீர் என்று பல புதிய கோளாறுகள் தோன்றும் (உதாரணமாக, திரேகம் மிகச் சூடாகவும், காய்ச்சலுடனும் மிகச் சீக்கிரமாக வியர்வை, உடல் களைப்பு தோன்றி மூச்சு விட முடியாமல் திணரலும் ஏற்படும்) இதுமாதிரி ஏற்பட்ட சமயங்களில் மரண பயம் என்ற மனக்குறி இல்லாவிட்டால் ஐயோடியம் கொடுக்க வேண்டும். உடனே சுரம் தணிந்து விடும். இம்மாதிரியான நிமோனியா என்ற கப சுரங்களுக் கும் கொடுக்கலாம். மரணப் பயம், சாவுப் பயம் என்ற மனக்குறி இருந்தால், **அக்கோனைட்** தான் கொடுக்க வேண்டும். ஐயோடியத்திற்குண்டான சில முக்கியமான குறிகள் **என்னவென்ருல்:—**

நாடித்துடிப்பு போன்ற துடிப்புகள், உடல் முழுவதும் தலை, நெற்றியின் பொட்டுகளில், கைகள், முதுகு, வயிற்றி னுள்ளே காணப்படும், இருதயத்தை நசுக்குவதுபோன்ற உணர்ச்சியும், படபடப்புடனும், நிலை கொள்ளாமல் தவிக் கும் தன்மையும் இருக்கும்,

## 31. ஐரிஸ் வர்ஸிகலர். (Iris Versicolor)

பொதுவாக வாயிலிருந்து ஆசனவாய் வரையிலு முள்ள, அன்னபாதை சம்பந்தமான உறுப்புகளின் உபாதை களுக்கு உபயோகப்படும் மருந்து. **அஜீர்ணத்திலுல் வாந்தி பித்த உபரி, பித்தத் தலைவலி,** இவைகளுக்கு நல்ல மருந்து

**முக்கியக் குறிகள்:**—வாய், நாக்கு, தொண்டை, உணவுக் குழாய், வயிறு, ஆசன வாய், இவைகளில் எரிச்சல் (தீப்பந்தம் எரிவது போன்ற எரிச்சலுடன், குழகுழப்பான மலம் வெளிவருதல்) கம்பி போன்ற கோழை.

**உபயோகம்:**— (1) வாந்தி, குமட்டல், இவைகளுக்கு **'இபிகாக் உலு'** வைப்போல **'ஐரீஸ்'** கொடுக்கலாம். ஆனால் இதில் வாந்தி எடுப்பவர்களுக்கு, தொண்டையிலும் உணவுக் குழாயிலும், வயிற்றிலும், எரிச்சலுடன் வாந்திவரும் மேலும் சிலருக்கு முறை வைத்து அதாவது வாராவாரம், அல்லது மாதா மாதம், சிற்சில பருவ காலங்களிலும் அல்லது ஆறு வாரத்திற்கு ஒரு தடவையும், வாந்தி வருவதுண்டு. வாந்தி 2 அல்லது 3 தினங்கள் நீடித்திருக்கலாம். வாந்தி எடுக்கும் பொருள் மிகவும் புளிப்பாகத்தான் இருக்கும், சிற்சில சமயங்களில் காரமாகவும், உப்பு, தித்திப்புடனும் இருக்கலாம்.

வாந்தி எடுக்கும் பொருள்களுடன் நீளமான கம்பி போன்ற கோழை ஏராளமாய் வெளியாவது தான் முக்கிய குறிகளாகி ஐரிஸ் கொடுப்பதற்கு வழிகாட்டியாயுள்ளன. முறை வைத்து வரும் ஷை குறிகளுடன் ஏற்படும் வயிற்று வலி, வயிற்றோட்டம், வயிற்றுக்கடுப்பு, தலைவலி, இவைகளுக்குக் கொடுக்கலாம்.

(2) **வலிகள்:**—சகல தலைவலிக்கும் இதைக் கொடுக்கலாம். என்றாலும் முக்கியமாக பித்த உபரி, அஜீர்ணம், காப்பி, டீ, அதிகமாகச் சாப்பிட்டு அதனால் உண்டான பித்தம், இக்காரணங்களினால் ஏற்பட்ட தலைவலிக்கு மிகச் சிறந்த மருந்து, இத்தலைவலி பெரும்பாலும் வலது பக்கமாய்த் தான் வரும். அத்துடன் கண் பார்வை மங்கும், பார்க்கப்படும் வஸ்து பாதியாகத் தெரியும். தலைவலி அதிகமானவுடன் வாந்தி எடுக்கவும் செய்வார்கள் வாந்தி எடுத்த பிறகு கண் பார்வை தெரிய ஆரம்பிக்கும். **வலது நெற்றி, பொட்டு, வலது சிறு நீரகம்,** இவைகளில் வலி உண்டாவது தான் முக்கியமாகத் தெரிந்துகொள்ளவேண்டியதவசியம். ஆனால் தொடை நரம்பு வாதம் போன்ற வலிகளுக்கு **இடது பக்கம்** தான் (இடது பக்கத்தொடை நரம்பில் கடுமையான) வலி ஏற்படும்.



## 32. ஒபியம் (Opium)

**ஒபியம்** என்றால் நமது தமிழ் மொழியில் அபின் என்று பொருள். இந்த அபினை, அல்லோபதியர்கள், மார்பியா என்றும் சித்த, ஆயுர்வேத வைத்தியர்கள் அபின் சத்து என்றும், வைத்தியத் துறையில் உபயோகிக்கின்றார்கள். இவர்கள் உபயோகிப்பதற்கும், நாம் உபயோகிப்பதற்கும், (ஹோமியோபதி முறைப்படி) மாறுபட்ட நிறைய வித்தியாசங்கள் இருக்கின்றன. அதாவது அவர்களால் ஒரு வியாதியின் வலிகளை தற்காலிகமாக நிவர்த்திக்க அபினைக் கொடுத்து மயக்கத்தை உண்டாக்கி வலியை மறக்கச் செய்வார்கள். இவ்விதம் செய்வதில் பலவிதமான கோளாறுகள் பின்னர் ஏற்படுகின்றது. இக்காரணத்தினால் ஏற்படும் கோளாறுகளை நிவர்த்திக்க, நமது முறைப்படி. விரியப்படுத்தப்பட்ட ஒபியத்தைக் கொடுத்தால், நிவர்த்தியாகும்.

**முக்கிய குறிகள்:**– எந்த ஒரு வியாதியிலும், நோய் முற்றி, ஸ்மரணையற்று, சுய நினைவில்லாமல் கண்கள் சிவப்பாகி **பாதிக்கண் திறந்தும், கீழ்தாடை தொங்கியும்,** முகம் உப்பியும், சிவந்தும், (வாய் திறந்தபடி இருப்பதுடன்) திரேகம் முழுவதும் சூடாகி **கொரட்டை மூச்சு வாங்கிக் கொண்டும்** வியர்வை வியர்த்துக்கொண்டும் இருந்தால், கண்டிப்பாய் ஒப்பியத்தைக் கொடுத்துக்காப்பாற்றலாம்.

**உதாரணமாக:—** நீடித்த சுரம், டைபாய்டு சுரம், நிமோனியா சுரம் போன்ற வியாதிகளில் தேவைப்படும்.

**மற்ற உபயோகம்:—** (1) நாம் ஹோமியோபதித் துறையில் இறங்கி, வைத்தியம் செய்யும் காலங்களில், ஒரு வியாதிக்குத் தகுந்த மருந்தை தேர்ந்தெடுத்துக் கொடுக்கின்றோம். அதுவரையிலும் சரிதான், தவறு ஒன்றுமில்லை ஆனால் சில சந்தர்ப்பங்களில் பலன் ஏற்படுவது கிடையாது. அதற்குக் காரணம் அவ்வியாதியஸ்தரின் உடலில் ஏதோ ஒருவிதத் தடுப்பு சக்தி அம்மருந்தை வேலை செய்ய விடாமல் தடுக்கின்றது. இச்சந்தர்ப்பங்களில் ஓபியத்தை ஒரு தடவை கொடுத்து பின்னர் அவ்வியாதிக்கேற்ற மருந்தை மறுபடியும் கொடுத்தால் "சூரியனைக்கண்ட பனிபோல்" பிணி விலகும்.

(2) **நரம்பு சம்பந்தமான** பக்ஷவாதம், பாரிசவாயு, கால்கள் நடந்தால் பின்னுதல், தள்ளாடுதல், வலிப்பு நோய்களில் ஷை முக்கியக் குறிகளுடன் இருப்பின் இவைகளுக்கு கொடுக்கலாம். உதாரணமாக **மாந்த இழுப்பு இசிவு, ஜன்னி.** இவைகளில் முகம, வாய், **கண்பாதி** திறந்து, கை கால்கள் **கோணல் கோணலாக** இழுத்தல் இவைகள் தான் முக்கிய குறிகளாகும்.

(3) மலச்சிக்கல், (மலக்குடலின் பாரிசவாதக் கோளாறினால் மலம் கழிக்கும் உணர்ச்சி குன்றிவிடுதல் இதனால் மலம் சில நாட்கள் தங்கி கடினமான கரு உருண்டைகளாக மாறி வெளியேற்ற முடியாமல், பேதி மருந்து அல்லது எனிமா என்ற குடல் கழுவி மூலம், வெளியேற்றும்படி நேரிட்டால், ஓபியத்தைக் கொடுத்துவர, மலம் பிரிய ஆரம்பிக்கும்.



(4) சிறு நீர்பை என்ற மூத்திர பையின் பாரிசவாதத்தினால் மூத்திரம் வெளியேறாமல், தங்கி விடுவதற்கும் அல்லது சிறிது நேரம்கூடத் தங்காமல், சதா **சிறுநீர் ஒழுக்கல் இருந்தாலும்** ஓப்பியம் 200 வீரியத்தில் கொடுத்து நிவர்த்திக்கலாம். (இக்கோளாறுகளுக்கு "**காஸ்டிகம்**" என்ற மருந்தும் உபயோகமாகின்றது.

## 33. க்ளோனைன். (Glonoine)

வியாதிகளில் திடீரென்றும் கடுமையாகவும் தோன்றும் குறிகளை உடைய மருந்துகளில் "ஸ்ட்ரமோனியத்தை" ஒரு பூகம்பம் என்றால், 'க்ளோனைன்' ஒரு சூறுவளிப்புயல் காற்றுக்கு ஒப்பிடலாம்.

**முக்கியக் குறிகள்:—** இருதயப் படபடப்பும், கடுமையான நாடித்துடிப்பும், பொருக்க முடியாத **துடிக்கும் தலை வலிகள், இருதய வலிகள்** உடலின் பல பாகங்களுக்கும் பரவுதல், தலை பெரியதாகி விட்டது போன்றும், உப்பி பருத்துவிட்டது போன்றும் தோன்றுதல்.

**உபயோகம்:—** (1) தலைவலிக்கு இதுவும் ஓர் முக்கிய மருந்தாகும. தலைவலியானது, பின் மூளையில் ஆரமபித்து (கழுத்து பின் தலையில்) கண்களுக்கும், பொட்டுகளுக்கும பரவும். அதனால் தலை, கழுத்து பாகங்களிலுள்ள இரத்தக் குழாய்கள் புடைத்தும, வெளியில் தெரியும்படியாகவும், வெடித்து விடுமோ என்று நினைக்கின்ற அளவு புடைத்துக் காணும். இம்மாதிரி தலைவலி, ஒரு சிலருக்கு வெய்யலில் சென்று அலைந்த காரணத்தினாலும், (Blood Pressure) 'பிளட் பிரஸ்சர்' என்ற இரத்த அழுக்கம் அல்லது இரத்த விசை அதிகரிப்பினாலும் ஏற்படலாம். (அதாவது இரத்த அழுக்க வியாதியில் தலைக்கும், இருதயத்திற்கும் மிக வேகமாக (B. P. 210 and above) இரத்தம் ஓடுதல்.) இத்தலை வலிக்கு நிகரற்ற நிவாரணி.

(2) மேலும் ஷை குறிகளுடன் கூடிய தலைவலியானது, பெண்களுக்கு மாதவிடாய் தடைப்படுத்தப்பட்டும் கிரமமாக வெளியாகாமல், ஒழுங்கற்றும் இருக்கும் சமயங்களிலும், சுமார் 45, 50-வது வயதில் தானுகவே மாதவிடாய் நின்ற நேரங்களிலும், ஏற்பட்டால் அதை நிவர்த்தித்துத் தலைவலியைப் போக்கும்.

(3) பிரஸவம் முடிந்ததும் பெண்களுக்கு உண்டாகும் பிரஸவ ஜன்னிக்கும் இசிவு, **வலிப்புக்கும்,** ஷை குறிகள் அதாவது **தலை பெரியதாகிவிட்ட உணர்ச்சியும்,** இருதய படபடப்பும், முகம் உப்பியும் இருந்தால் 'க்ளோனைன்' கொடுக்கலாம். இந்த வியாதிக்கு எக்ளாம்ப்ஸியா (Eclampsia) என்று பெயர். இவ்வியாதியானது பிரஸவித்த பெண்களின் நீரில் அல்புமென் (Albumen) என்ற உப்புச் சத்து அதிகமாக இருக்கின்றபடியால் ஏற்படுகின்றது.

## 34. க்ரடேகஸ் (Crataegus)

இது இருதயத்தைப் பலப்படுத்தும் ஔஷதம்,

**முக்கிய குறிகள்:—** திரேகத்தை இலேசாக அலட்டிக் கொண்டாலும், சிறிது வேலை செய்தாலும் கடுமையான (அதிகமாக) மூச்சுத்தினரல் ஏற்படும். இருதய ஓட்டம் நின்றுவிடும்போல் தோன்றுதல், இடது கழுத்து, தோல் பட்டை எலும்பின் கீழ் வலி.

உபயோகம்:— (1) இருதயத்தில் **நீர் அதப்பு** இருந்து **வலி ஏற்பட்டு** மூச்சுத்திணரல் கடுமையாயும் இருந்தால், **கிரடேகஸ் Q, புனர்னவா Q** இவைகளை மாற்றி, மாற்றிக் கொடுக்கலாம்.

(2) குழந்தைகளுக்கு ஏற்படும் **சர்க்கரை** வியாதிக்கு கொடுக்கலாம்,



(3) இருதயச் சுவர்கள் பலவீனப்பட்டு, இருதயநடை நாடித்துடிப்பு ஒழுங்கற்றும், விட்டு விட்டு இருந்தால், இதைக் கண்டிப்பாய் கொடுக்கவும்.

(4) கடுமையான வியாதிகளில் இருதயத்தைப் பலப்படுத்தவும், பலவீனமடையாதிருக்கவும் மற்ற மருந்துகளுடன் நடுவே இதைக் கொடுக்கலாம்.

(5) **சுரத்தின்** கடுமையால், ஜன்னி பிறந்து கை கால்கள் ஜில்லென்று இருந்தாலும், இசிவு, வலிப்பு ஏற்பட்டாலும், மற்ற மருந்துகளுடன் இதையும் கொடுத்து வர வேண்டும்.

(6) **இருதயம்** இடம் பெயர்ந்த காரணத்தால், **சில**ருக்கு இருமலும், காய்ச்சலும் ஏற்படுவது சகஜம் அல்லது இருமல் மட்டும் ஏற்படலாம். அப்பொழுதும், **அவீனா சடைவா** Q வையும், **கிரடேகஸ்** Q வையும், **கல்கேரியா பாஸ்** 6x யும் மாற்றி மாற்றிக் கொடுக்கலாம்.

## 35. க்ரிண்டேலியா ரோபஸ்டா (Grindelia Robesta)

இந்த மருந்து **ஆஸ்துமா** வியாதிக்கு உபயோகமாகின்றது. தாய் திராவகமாகவே உபயோகிக்கவேண்டும்.

**முக்கியக் குறிகள்:—** எந்த வியாதியிலும், நோயாளி தூங்க **ஆரம்பித்து** இலேசாகக் கண்ணை மூடியவுடன் **சுவா**சம் நின்று மூச்சு முட்டல் ஏற்பட்டு விடுவதால், திடுக்கென்று படுக்கையை விட்டு எழுந்து உட்கார்ந்தபடியே சுவாசத்தடுமாற்றத்துடன் மூச்சுவிடுவார். மீண்டும் தூங்க ஆரம்பித்தால் **சுவாசம்** எங்கே நின்று விடுமோ என்று ஏங்கி படுக்கையில் வியாதியஸ்யர் படுக்கமாட்டார். ஆஸ்துமா போன்ற ஷை குறிகளுடன் உள்ள **வி**யாதிகளில், பிசுக்

கென்ற கோழை வெளியேற்றப்படுவதும், வியாதியஸ்தரின் **கண் விழிகளில் வலியும் ஏக காலத்தில்** இருப்பதே முக்கிய குறியாகும்.

## 36. க்ரியசோட். (Kreosote)

இது கருப்பு நிறமுள்ள தார் போன்ற பொருள்களில் இருந்து ரசாயன முறைப்படி தயாரிக்கப்படும் ஓர்வித அமிலம், சரீரத்தின் பூந்தசைகளிலும் பல், ஈறு, கர்ப்பபை, யோனி முதலிய பாகங்களில் தோன்றும் பல வியாதிகளுக்கு உபயோகமாகின்றது.

**முக்கியக் குறிகள்:**—பல்வலி, பல் சொத்தை யாகுதல், உடல் மெலிவு, எரிச்சல், அறிப்பு, (கழிவுகள்பட்ட பாகங்களில்) காரமுள்ள கழிவுகள் பட்ட இடங்களில் தோலை உறிக்கும் குணமும், விஷத்தன்மையும் உடையவைகள். மிகச் சிறிய காயங்களிலும் கூட அமித ரத்தப் போக்கு இருக்கும்.

**உபயோகம்:**— (1) **சிறு குழந்தைகளுக்கு,** பல் முளைக்கும் காலங்களில் ஈறுகள் வீங்குவதும், மெத்த வலியுடன் பற்கள் முளைத்து வெளிக்கிளம்பும். அவ்விதம் வெளிவந்த பற்கள் உடனே சொத்தையாகி விடும். சொத்தைப் பற்களுடன் அல்லது பற்களின் நடுவே ஓட்டை, குழிகள் புள்ளிகள் கருப்பு நிறத்துடன் இருப்பதும், இத்துடன் அதிக கெட்ட நாற்றமுள்ள வயிற்றுப் போக்கும், வாந்திவும் கடுமையாக இருந்தால் **'கிரிய சோட்'** மிகச் சிறந்த சஞ்சீவியாகும்.

(2) **பெண்களுக்கே** உண்டான **வெள்ளை ஒழுக்கு** (Leucorrhoea) **வியாதியில்** யோனியிலிருந்து வெளியேற்



றப்படும் வெள்ளை நீர் காரக் குணத்துடன் மிக்க நாற்றமும், பட்ட இடங்களை ரணமாக்கிக்கொண்டும், (உதாரணமாக அந்நீர் துணிகளில் பட்டால் மஞ்சள் நிறமான கறைகளை உண்டாக்கும்) அறிப்பும், எரிச்சலும் பிரதானமாயிருக்கும் சில பெண்களுக்கு டி நீர் காரமாக அடிக்கடி வெளி வருவதினால், யோனியின் உள்பாகச் சுவர்களின் தோல் உறிந்து அரிக்கப்பட்டு புண்ணாகி, இப்புண்களின் வழியாய் ரத்தப் பெருக்கு நேரிடுகின்றது. **இதற்கு இம்மருந்தைக் கொடுக்கவும்.**

(3) பெண்களின் மாதவிடாய் குறிப்பிட்ட காலத்திற்கு முன்னதாகவே **ஆரம்பித்து.** ஏராளமாக வெளியாகும் போக்குபல நாட்களுக்கு நீடித்திருக்கும், இவ்விதம் போகும் மாதவிடாய், நடந்துகொண்டும், உட்கார்ந்துகொண்டும் இருக்கும் சமயங்களில் போகாமல், அவ்வியாதியஸ்தர் **கீழே படுத்தவுடன் சூதகம் (மாதவிடாய்) போக்கு ஆரம்பிக்கும்.** இது ஒரு **அபூர்வமான** குறியாகும். இக் குறி இருப்பின் **'கிரிய சோட்'** நன்கு வேலை செய்யும்.

(4) புணர்ச்சிக்குப் பின் யோனியிலிருந்து தவறாமல் ஏற்படும் இரத்தப் பெருக்கிற்கும், சிலருக்கு இரத்தத்தில் பைபிரின் (Fibirin) என்ற ரத்தம் உறைதல் தன்மையை இழந்தவர்களுக்கு, மிகச் சிறிய காயங்கள் உண்டானாலும் அமித ரத்தம் ஒழுகும். மூக்கிலிருந்து அழுகிய நாற்றமுள்ள சீழ்வருவதற்கும், சிறுநீர் நாற்றமுடனும் நிறமே இல்லாமலும் அளவு கடந்தும் வெளியாவதற்கும், குழந்தைகள் இரவில் முதல் தூக்கத்தில் சிறுநீர் விடுவதற்கும், இப்பேர்ப்பட்ட குழந்தைகளை தூக்கத்திலின்றும் எவ்வளவு எழுப்பினாலும் எழுப்ப முடியாது. அவ்வளவு தூக்கத்திலிருக்கும். சில குழந்தைகளுக்கும், பெரியவர்களுக்கும், **கீழே படுத்துக்கொண்டால் தான் மூத்திரம் கழிக்க முடியும்.**

N. B:—சிலருக்கு நின்றுகொண்டிருக்கும் நேரத்தில் தான் மூத்திரம் கழியும், இப்பேர்பட்டவர்களுக்கு **'காஸ்டிகம்'** நல்ல மருந்தாகும்.

## 37. க்ரோட்டன் டிக்லியம் (Croton Tiglium)

இது நமது தமிழ் வைத்தியர்கள், பெரும்பாலும், பேதி மருந்தாக உபயோகப்படுத்தும், நேர்வாளப் பருப்பின் கொட்டையே. நாம் நமது வீரியப்படுத்திய முறையில் பேதியை நிறுத்துவதற்கு உபயோகப்படுத்துகின்றோம்.

**முக்கிய குறிகள்:**—பேதி, வயிற்றோட்டம் இவைகளில் **குபீர் குபீரென்று** ஒரே தடவையில், மலம் மஞ்சளாக **மிக வேகமாக** வெளியே பீச்சப்படும், மேலும் பேதி உண்டானவர்களுக்கு, சிறிதளவு **ஆகாரமோ அல்லது தண்ணீரோ** உட்கொண்டவுடன் பேதியானது சற்று அதிகமாகவே பீச்சும், இம்மாதிரி மலம் மஞ்சளாகவும், அல்லது வெள்ளைத் துணுக்குகளுடனும், காலரா போன்ற பேதி நேரங்களில் இருக்குமானால் இம் மருந்தைக் கொடுத்தால், பேதி நின்றுவிடும்.

**வேறு உபயோகம்:**— (1) தோல் வியாதிகளில், உடல் பூராவும் சொறிகள், அறிப்பு அதிகம் ஆனால் சொறிய முடியாத்தன்மை; அதாவது சாதாரணமாக அறித்தால் சொறிந்து சொறிந்து விரல்களின் நகம்பட்டு அந்த இடம் புண்ணாகிவிடுவதுதான் சகஜம், இந்த சர்ம வியாதிக்கு சொறியுள்ள பாகம், சொறியாமலே மிக இரணமாகி விடும். அதாவது தொடை, இடுக்கு, ஆண்குறி, பெண்குறி முதலிய இடங்களில் தாங்க முடியாத அறிப்பு, படை ஏற்பட்டால் 30 அல்லது 200 வீரியத்தில் கொடுத்து வந்தால் நிவர்த்தியாகும்.



(2) குழந்தைகளுக்கு பால் கொடுக்கும் காலங்களில் சில **தாய்மார்களுக்கு**, பால் கொடுத்துக்கொண்டிருக்கும் **ஸ்தனக்காம்பில்**, அதே நேரத்தில் **சுருக்கு, சுருக்கென்றும்**, வெடுக் வெடுக்கென்றும், ஒரு விதமான வலி ஆரம்பித்து அதே தோல்பட்டை மார்க்கமாக ஒரு கயிற்றைக் கட்டி இழுப்பது போன்று **வலி** செல்லுகின்றன. இந்த வலி ஏன்? எவ்வாறு, ஏற்பட்டது என்று யாரும் சொல்ல முடியாது. ஆனால் **"க்ரோட்டன் டிக்லியத்தை"** 30 வீரியத்தில் கொடுத்தால் அந்த உபாதை நிவர்த்தியாகின்றது. இந்த மர்மமான, மாயாஜால வலியைப் போக்கும் சிறந்த மருந்து என்பதை யாரும் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும்.

## 38. கன்னபிஸ் சடைவா (Cannabis Sativa)

மேக வெட்டை அல்லது கனோரியா (Gonorrhoea) என்ற நோயின் ஆரம்பத்தில் கொடுக்கப்படும் மருந்து.

**முக்கியக் குறிகள்:**— நீர்த்தாரையில் லேசாக எரிச்சலுடன் வலியும், வேதனையும், அத்துடன் இந்திரிய ஒழுக்கும் இருந்து கொண்டிருக்கும். சில ஆண்களுக்கு ஷி நோயின்போது ஆண்குறியின் நுனியில் (மானிக்கொண்டையில்) சிறிது வீக்கத்துடன் நடக்கும் போது (தொடைகளில் உராய்வதனால்) நெருப்புச்சுட்டதைப் போன்ற வலி எடுக்கும். அதனால் தன் கால்களை அகற்றி வைத்தே நடந்து செல்லுவார். ஷி நோய் முற்றி அதனால் சிறுநீர்ப் பையும் பாதிக்கப்பட்டு, சற்று முதுகின் கீழ் பாகத்தில் இடை இடையே வலி எடுப்பதும். அத்துடன் சிறிது இரத்தமும் கலந்து சிறுநீர் வெளியேறினாலும் இவ்வௌஷதம் கொடுக்க வேண்டியது தான். (இவ்வியாதிக்கு, **எரிச்சலும் கடுப்பும்** அதிகமாக இருந்தால், **காந்தாரிஸ்** தான் உபயோகப்படும்)

**வேறு உபயோகம்:— பச்சையான கபம்**, இருமி, இருமி வெளிப்படும் ஆஸ்துமா வியாதிக்கும் கொடுக்கலாம். ஆஸ்துமா இழுவையின் போது மூச்சு **குறட்டை**யுடனும், **வீஸ், வீஸ்**, என்ற சப்தத்துடனும் நோயாளிக்கு ஏற்படுகின்றது. இதற்குத் தாய் திராகவத்தில் கொடுக்கவேண்டும் வெட்டை, வெள்ளை நோய்களுக்கு 30 முதல் 200 வீரியம் வரை உபயோகமாகும்.

2. ஷை வியாதியின் உபாதைகள் சரிவர நிவர்த்திக்கப் படாவிட்டால், சிலருக்கு கை, கால் விரல்களின் நுனி அடிக்கடி மறத்துப்போகின்றது. அதற்கு, 200 வீரியத்தில் ஷை மருந்தைக் கொடுத்துக் கொண்டும், இடை இடையே, இருதயத்தைப் பலப்படுத்த **'கிரடேகஸ்'** Q கொடுத்துவர வேண்டும்.

## 39. காந்தாரிஸ். (Cantharis)

நம் நாட்டில் குழவி என்ற ஈக்களுக்கு அதன் கொடுக்கில் விஷம் இருப்பது போலவே, ஐரோப்பிய தேசங்களிலுள்ள ஒருவித ஈக்களின் விஷத்திலிருந்து இம்மருந்து தயாரிக்கப்படுகின்றது. இதற்கு முழுப்பெயர் காந்தாரிஸ் வெஸிகடோரியா (Cantharis Vesicatoria)

**முக்கிய குறிகள்:**—மூத்திரத் தாரையில் கடுமையான எரிச்சல், கடுப்பு, வேதனை, மூத்திரம் அடிக்கடி பிரியவேண்டும் என்ற தூண்டுதல், எந்த வியாதி வந்தாலும், நீர்கடுப்பு இருக்கும் தேகத்தின் எப்பாகத்திலும் வரக்கூடிய எக்ஸிமா என்ற சர்ம நோய்களில், பாதிக்கப்பட்ட பாகம் சிவந்தும், கடுப்பும், எரிச்சலும் முக்கியமான குறிகளாகும்.

**உபயோகம்:**— (1) வெள்ளை, வெட்டை நோய்களில் ஷை குறிகளுடன், மூத்திரம் சொட்டுச் சொட்டாக பிரிந்



தால் இக்குறி முக்கியமானதாகும். அத்துடன் மூத்திரம் பெய்வதற்கு முன்பும், பின்னும், நீர் பிரியும் போதும் எரிச்சல், கடுப்பு, வலி, வெட்டுவது போன்றும் இருந்தால் இதை கொடுக்கலாம். இம்மாதிரிக் குறிகள், மூளை, சுவாசப்பை, குடல் இவைகளில் அழற்சி, வேக்காடு ஏற்பட்டு அதன் காரணமாக, சுரம் தோன்றி, நீர்த்தாரையில் இக்குறிகள் பிரதானமாயிருப்பின் காந்தாரிஸ் தான் கொடுக்கவேண்டும். மேலும் **எரிச்சல்**, குறி தேகத்தின் பல பாகங்களான, **வாய், தொண்டை, வயிறு**, குடல், **அபானம், சர்மம், உள்ளங்கால், உள்ளங்கை**, இவைகளில் இருந்தாலும், காந்தாரிஸ் உபயோகமாகும்,

(2) நீர் கடுப்புடன் சிலருக்கு ஏற்படும் ஆஸ்துமா வியாதியில் கபம், பிசுக்கென்று ஒட்டும் தன்மையுடன் வெளியானால் இம்மருந்து உபயோகப்படுகின்றது.

(3) தோல் வியாதியான, **எக்ஸிமா**விற்கு, பாதிக்கப்பட்ட பாகம் சிறிது வீக்கத்துடன் **குருணை** போன்ற அநேக கொப்புளங்கள் சிவந்தும், எரிச்சல், வலியுடன் இருந்தால், முதலில் 200 வீரியத்தில் ஊசி மூலம் மருந்தைச் செலுத்தினால், வீக்கம் குறைந்து கொப்புளங்கள் மாயமாய் மறையும். (அனுபவக் குறிப்பு)

(4 சர்ம வியாதியான அக்கிப்படுவன் வியாதியில், அபிஸ்மெல்லிபிகாவிற்கும் இம்மருந்திற்கும் சில வித்தியாசங்கள் தான் காணப்படுகின்றது. அதாவது **வீக்கம் அதிகமாயும்**, கொப்புளங்கள் இல்லாமலும் சிவந்தும் கொட்டும் வலியுடனும் இருந்தால் **'அபிஸ்'** தான் கொடுக்கவேண்டும் ஆனால் **காந்தாரிஸ்** கொடுக்கவேண்டுமானால், **சிறிது** வீக்**கத்துடன்**, கொப்புளங்கள் அதிகமாயும், சிவந்தும், எரிசலுடன் கடுப்பு வலி இருந்தே தீரவேண்டும். மேலும் மூத்

திரக் குறிகளும் தென்படும். குழந்தைகளின் கரப்பான் படை, கால்கடுவன் இவைகளுக்கும் கொடுக்கலாம்.

(5) **நெருப்புச்சுட்ட புண், வெண்ணீர், கொதித்த எண்ணெய்** இவைகள் பட்டதினால் ஏற்பட்ட புண்கள், ரணங்களுக்கு வெளி உபயோகத் திராவகத்தில் 20 சொட்டும், வாஸலைன் ½ அவுன்ஸூம் சேர்த்துக் கலந்து மேல் பிரயோகமாகத் தடவி வந்தால் சீக்கிரம் அந்த ரணங்கள் ஆறும். உள்ளேயும் 30 வீரியத்தில் சில வேலைகள் கொடுத்துவர வெகு சீக்கிரம் குணத்தைக் காணலாம்.

(6) வயிற்றுக் கடுப்பு **அல்லது சீத பேதி** வியாதியில் குடல் சுவர் அல்லது குடலிலிருந்து **சதையைப்பிய்த்து** கிழித்துக்கொண்டு வெளியாகும் கடுமையான வயிற்றுப் போக்குடன் (மூத்திரக் குறியும் இருக்கலாம்.)

## 40. கல்கேரியாகார்ப் அல்லது கல்கேரியா ஆஸ்ட்ரியேரம் (Calcareacarb or Calcarea Ostrearum)

நம் நாட்டில் கடலோரப் பிரதேசங்களில் கிளிஞ்சல் ஓடுகளை சுண்ணாம்புப் பொருளாக்கி, **வீட்டின் உபயோகங்**களுக்குப் பயன்படுத்தும், சுண்ணாம்பிலிருந்து வீரியப்படுத்திய மருந்தே. மேலும், உடல்வாகை அனுசரித்து ஊட்டக் குறைவு, உண்ட உணவு உடலில் ஒட்டாமை போன்ற வியாதிகளுக்கு உபயோகமாகும் முக்கியமருந்தாகும்.

**முக்கியக் குறிகள்:—** ஊளச்சதை, பருத்த உடல், மந்த குணம், சில்லிப்பு உணர்ச்சி, உள்ளேயும், வெளியேயும் சில சமயம் சில்லிப்பு பனிக்கட்டியைப்போல் இடுப்புக்குக் கீழே ஏற்பட்டாலும் அல்லது உடல் பூராவும் **சில்லிப்பு வியர்வை தலையணை நனையும் அளவு.**



**உபயோகம்:—** (1) குழந்தைகளுக்கு எலும்புகள் வலுக்குறைந்து ஊட்டக் குறைவினால் உரமில்லாமல் கை, கால் எலும்புகள் வளைந்தும், கூன் தள்ளியும் அத்துடன் வயிறு பருத்தும், பிடிவாதக் குணமும், சதா அழுது கொண்டும், மந்த புத்தியுடனும், சில சமயங்களில் உட்கார்ந்த இடத்தை விட்டு நகர்ந்து செல்ல முடியாமல், பருத்தும் ஊளச் சதையுடனும் இருக்கும் குழந்தைகளுக்கு 30 வீரியத்தில் 2, 3, தடவைதளுக்குமேல், உபயோகிக்காமல் மிதமாய்க் கொடுத்தால், இழந்த உயிர்ப்பு சக்தி மீண்டும் வேலை செய்ய ஆரம்பித்து நல்ல ஆரோக்கியமாய் குழந்தை வளரும் சிசுக்களின் உச்சிக்குழி சரிவர மூடப்படாமல் பள்ளமாகவே இருந்தாலும், அதற்கு கொடுத்துக் குணம் காணலாம்.

(2) முன் சொன்ன குறிகளுடன் கூடிய டி. பி. என்ற க்ஷயரோகத்திலும், வியர்வை பிரதானமாக, அதாவது சில்லிட்ட வியர்வை, ஏராளமாகவும், படுத்திருந்தத் தலையணை நனையும்படியான வியர்வையும். இருந்தால் நன்கு பலனைக் காணலாம், எந்த வியாதிக்கும். உடலின் பின் கழுத்து, மார்பின் பக்கம் கை, கால், கஸ்கம் போன்ற இடங்களில் வியர்வை வியர்த்துக்கொண்டே இருந்தாலும் கண்டிப்பாய் 'கல்கேரியாகார்ப் 30' வீரியத்தில் கொடுக்கலாம்.

(3) சுறு சுறுப்பில்லாத குழந்தைகளுக்கு தாமதமாக பல் முளைக்கலாம், 2, 3 வருடங்களாகியும் நடக்க சக்தியற்று சில குழந்தைகள் மண், மணல், சாக்கட்டி போன்றவைகளைத் தின்று, வயிறு பருத்து பானையைப் போன்றும், கடினமாயும் இருப்பதற்கும் இவ்வௌஷத்தில் 6x என்ற வீரியத்தில், 4 வேளைகள் வரைக் கொடுக்கலாம். சிறு குழந்தைகளுக்கு ஜீர்ணக் கோளாறு ஏற்பட்டு மலம், பலவிதக் கலர்களுடன், புளித்த நாற்றத்துடன் ஏற்படும் வயிற்றோட்

டத்திற்கும், புளித்த வாசனையாயுள்ள தயிர்க்கட்டிகளாக வாந்தி எடுப்பதற்கும், இம்மருந்தை 2 டோஸ் வரை 6 அல்லது 30 வீரியத்தில் கொடுத்து, பின்னர் வேறு மருந்துகள் கொடுக்கலாம். வயிற்றுப் போக்கு சாயங்காலம், பிற்பகலில் அதிகமாகும்.

கவனிப்பு:—பருத்த சரீர வாகை உடையவர்கள் தண்ணீரில் சதா வேலை செய்யக்கூடாது. வாதநோய் வந்துவிடும் (இச்சமயங்களில் வாத நோய்க்கு, 'கல்கேரியா கார்ப்' ரஸ்டாக்ஸ்' மாற்றி மாற்றி சில வேலைகள் கொடுக்கலாம். சதா தண்ணீரில் நின்று வேலை செய்யும் வண்ணான், வண்ணாத்தி போன்றவர்களுக்கு ஏற்படும் காது கேளாமை, செவிட்டுத் தன்மைக்கும் நல்ல மருந்து. ஈரத்தில் நனைந்து விட்ட காரணத்தால் ஏற்பட்ட வாதவலிகளுக்கும், இடுப்பு வலிகளுக்கும் நல்ல மருந்தே.

எச்சரிக்கை:— இந்த மருந்தை அம்மாவசை, பௌர்ணமி தினங்களில் உபயோகிக்கக்கூடாது. க்ஷயரோகத்தில், ஒரு வேலை மருந்து கொடுத்து சரிவரக் கவனித்து அதன் பின்னர் இதைமறுபடியும் கொடுக்காமல். வேறு மருந்தைக் கொடுக்கலாம். வேறு எந்த வியாதிகளுக்கும், அடிக்கடி இம்மருந்தைக் கொடுக்கக்கூடாது.

**N. B:**—கண்ணின் கருவிழியில் உண்டாகும் புண்கள் அல்லது புள்ளிகள் இதற்கும், காட்டராக்ட் (Cataract) என்ற கண்ணில் பூ விழுதல், கண்ணிலுள்ள கண்மணி (Pimpil) என்ற பாப்பா விரிந்தபடியே பல நாட்கள் இருப்பின் அதற்கும், பொதுவாக கண்பார்வை மங்குவதற்கும் உபயோகப்படுகின்றது.

ஸ்ரீ நாகின் பிரஸ், 4, கீழப்பட்டமார் தெரு, மதுரை:-59



